# சூ ர ப து ம ன்

ஒரு தமிழக வீரன் கதை.

ஆங்கில ஆசிரியர்
மு. சி. பூர்ணலிங்கம் பிள்ளை, பி. ஏ., எல். டி.,
முன்னீர்ப்பள்ளம், திருநெல்வேலி.

ஆரியன் புத்தகசாலை,
திருவல்லிக்கேணி, சென்னை.

---

1926 [விலை அணா 12.

# முகவுரை.

இருபத்தொரு கூறுகள் கொண்ட சூரபதுமன் என்ற இச்சிறு நூலில் அவனுடைய வரலாறு முழுவதும் ஒழுங்குபடுத்திக் கூறப்பட்டுளது. சூரபதுமன் மகாவீரனென்பதும், அவன் எம்பெருமானடித் தொண்டனாய் வீரவேள்வி செய்து அழியா வரம்பெற்றவனென்பதும் வெளிப்படை. சிவாலயங்களிற் பன்னாள் நிகழுந் திருவிழாக்களில் ஒரு நாள் இவ்வீரனுக் குரியதாக வழிக்கிலிருந்து வருகின்றது. இவன் கடலிற் கரந்த தமிழ்மக்களின் பல உறைபதிகளிலொன்றிற்கு அரசனாயிருந்து, சுரருடைய செருக்கையடக்கி உலகமெலாம் புகழப் பெரும்பேர் பெற்றவன். இவன் சுரரைச் சிறைப்படுத்தியது மறமென்று கருதிய தெய்வப்புலவர் அன்னவரைச் சிறைமீட்டலறமென்றெண்ணித் தந்தை வரத்தால் எய்திய நீடூழி வாழ்வினை அருளாற் பிறந்த முருகவேளுதவியாற் சிதைவுறச் செய்து, அன்பாகிய சிவப் பெருமையை விளக்கியுள்ளார். இந்நூலில், தருக்கினால் மன்னாகி மன்னரின் சீரிறுமென்பதும், இல்லிறத்தலால் ஆடவரும் மடவாரும் ஆயுட் பயனை யிழக்கின்றனரென்பதும் அருட்பெருக்கால் ஆணவமிக்கெழுந்து தன்புற்றுப் பின்னர் அருட் பரிவாலது கெட, அருளின் திறம் விளங்குமென்பதும் எவருங்காணத்தக்க வுண்மைகளே யாம். அன்றியும், ஆராய்ச்சி செய்யும் நண்பர், எம்பெருமானுக்கு அடித்தொண்டு செய்த சூரபதுமன் போன்ற வலிமிக்கார் பலர் இந்நாட்டிற் காவலாளராயிருந்து, அவராணையைக் கடந்த ஒன்னலரை ஒறுத்துப் புறங்காட்டியோடச் செய்து, தமிழகத்தினைக் காத்து வந்தன ரென்றும், எம்மக்களும் தம்மக்களெனக் கருதும் சிவபிரான் எம்மக்களுக்கும் இடையூறு செய்யுந் தம்மடியாரையுங் கருணையினால் வன்று செந்நெறிப்படுத்துவ ரென்றும் கூறுவர். இது ஆராயத் கது. இந்நூலிற் காணப்படுஞ் செய்யுட்கள் கச்சியப்ப சிவாசாரியர ளிய சொற்சுவையும் பொருட் செறிவும் யாப்பழகும் கடைப்பிடி ளக்கமும் பொருந்திய கந்தபுராணத்தி லுள்ளன.

# பொருளடக்கம்.

# சூரபதுமன்.

## கூறு I.

### பிறப்பு.—தந்தை தாய்.

மாமேரு மலையின் வடபால் மாதவம் புரிந்த மாமுனிவர் பலரிலொருவர் பிரமாவின் தோன்றலாகிய காசிப முனிவர். அவர் தவ வலியால் எண்ணிய எண்ணியாங் கெய்துவர். ஐம்பொறியடக்கி மனமுருகித் தவஞ்செய்து வந்தபொழுது அவர் முன் பேரழகு வாய்ந்த உருவொன்று தோன்றிற்று. அதனைக்கண்டதும் முனிவர் மயங்கினர். காதல் மிகுந்தது. தவநெறிகுலைந்தது. இவ்வுருவினர் தாமரையாளோ, தெய்வமகளிரோ, என்று ஐயுற்றுக் கடையிற் பெண்கள் நாயகமென்று தெளிந்து, "திருவினு நல்லாளே, உன்னுடைய நல் வரவு நன்று, நன்று, உன்குல மெது. உன்னுறைவிடம் யாது. உன் பெயரென்னை, உன்னைப் பெற்றோர் யாவர்." என்று கேட்க, அவள், "அருந்தவ முனிவரே, யான் அரக்கர், அவுணர், அசுரர், இராக்கதர் எனப் பல பெயராலழைக்கப்படும் மாவலி பொருந்திய பலகோடி மக்களுக்கு இறைவனாகிய அசுரேந்திரனுக்கும், அவன் மனைவியாகிய மங்கலகேசிக்கும் பிறந்தவள். என் பெயர் சுரசை. எங்கள் குருவாகிய சுக்கிரன் யான் பருவமெய்திய வழி எனக்கு மாயை வித்தைகளனைத்தையும் கற்பித்து எனக்கு மாயை என்ற பெயரையும் அளித்தனர்.

"தூய அம்மகன் வளர்ந்தபின் புகர் எனுந் தொல்லோன்
நீய மாயையின் கல்விகள் யாவையும் தெருட்டி
ஆய விஞ்சையின் வல்லபம் நோக்கியே அவட்கு
மாயை யென்றபேர் கூறினன்மனத்திவை மதிப்பான்"

நினைக்தும் உருவெடுக்கவல்லேன். உன் தவமகிமை கேட்டுளேன். நான் மங்கலமியைந்த வடதிசையில் இருப்பவள். கங்கையை யடைந்து அங்கே எய்தப் பெறும் பயனனைத்து மொருங்கே பெற விரைந்து செல்வேன். உம்மைக் கண்ணுற்றதும் யான் செய்ய நினைத்த தவத்தின் பயனை எய்தினவளானேன். உம்முடன் இல்லறம் நடத்த விருப்பமுளேன், கருணைபுரிக" என்றனள். மாதவமுனிவர் மனங்குழைந்து, "கருங்குழலீர், எனக்குக் காதலையுண்டாக்கினீர்; என் நல்லுணர்வினைச் சூறையாடினீர்; நும்பாற் பற்றுடையனுயினேன்; மாயங் கைக்கொண்டீர்; தனிவந்த நீர் என்னுருயிர் நிற்க அருளும். வேறொருமாதரை விழையேன்; என் மயல்தீரச் சேரவாரும்; திருவுளமும் இதுவேயாகுக" என்று கூறினர்.

"வேண்டேன் வேறோர் மாதரை, நம்பால் வியன்மோகம்
பூண்டேன், நும்மை மாயவ ரென்னும் பொருள் கண்டேன்,
ஈண்டே சென்றீர் போற்கர வுற்றீர், எய்தீரேல்
மாண்டேன், இன்னே, ஆருயிர் நிற்பான் வருவீரே.
ஒன்றே யாகு மாயம தானீர், உலகெல்லாம்
வென்றே செல்வீர், என்னுயிர் கொள்வான் விழைவீ ரேல்
நன்றே, நன்றே, நல்குவன் யானே, நனி நண்பாற்
சென்றே யோர்கால் மாமயல் தீரச் சேர்வீரே."

இருவரும் மனமகிழ்ந்து கூடினர். இருமுது குரவரும் இணங்கினர். மணம் நிகழ்ந்தது. இரவிற்றிரிந்து காவல் செய்யும் இராக்கத வெள்ளங்கள் களிப்புற்று ஆடினர், பாடினர், தங்களுக்குப் பெருமையுஞ் சீரும் சிறப்புமெய்துமென்றும், தேவர்கள் தலைமடங்குவரென்றுங் கருதிப் பேருவகை யுற்றனர். காசிபரும் மாயையுங் கூடிக்குலவு நாளில் யான்கொள்ளு முருவம் நீருங் கொள்ளவேண்டுமென்று மாதரசிவேண்ட, 'அவ்வண்ணமே யாகுக' என்றருளினர்.

வெருவுற்றிடல் இவண்மின்ற என்வியன் மெய்யினுக்கு இயையுந்
திருமிக் குறு தகவாகிய திறன் மேனியு, மேற்கொள்
உருவொப்ப தொர் வடிவும், உடனுடன் எய்திடுவாயேல்
மருவுற் றிடுகின்றே னென மயில் சொற்றன ளன்றே.

இருவரும் பல வேறுருவமெடுத்துப் பன்னாள் முயங்கினர். தேவவுருவங்கொண்ட அன்னார் முயக்கின் முதற் பயன் சூரபதுமன். முற்பிறப்பில் சாகத்தீவி னரச குமாரராகிய சூரன், பதுமன் என்ற உடன் பிறந்தார் இருவரும் சிவபெருமானிடம் பெற்றவரத்தால் அன்புமிகுந்து ஒருருவாகி மாயை வயிற்றிற் ருேன்றினர். அது பற்றியே சூரபதுமன் என்ற பெயர் வழங்கியது. சூரபன்மனென்றும் அவனை அழைப்பார்கள்.

" முகுந்தனும் அம்புயத் தவனும்
இந்திராதியர் யாவரும் முனிவா ரெவரும்
தம்தம் உள்ளமே நடுக்குற மாயவள் தன்பால்
வந்து தோன்றினன் சூரபன்மா வெனும் வலியோன் "

---

கூறு II

## உடற் பிறப்பு

காசிபரும் மாயையும் உடனிருந்து அறஞ்செய்ய, சில காலங் கழிந்ததும், ஒருநாள் மாயையானவள் சிங்கவுருவங் கொண்டு முனிவரை அண்ட அவரும் ஆண் சிங்கமாகி இருவருங் கலந்தனர். இவ்வாறு கலந்ததன் பயனாக எவரும் அச்சமுறும்படி சிங்கமுகன் பிறந்தனன்.

"மானனேர்பவள் ஆயிடை தொல்லுரு மாற்றி
மேனரு் அரிப்பிணு உருக்கொள்ளலும் விரைவில்
தானு மோர்திறல் மடங்க லேற மெனச் சமைந்தான்
மோனமாய் முனம் அருந்தவம் இயற்றிய முதல்வன்.

"அங்கை யோர் இரண்டாயிர மாயிர முகமாய்ச்
சிங்கமா முகன் தோன்றினன் திடுக்கிடத் திசைகள்".

அதன்பின் பிடியானையுருக் கொண்ட மாயையைக் காசிபமுனிவர் கண்டு களிற்றி யானையாகி இருவருஞ் சேர்ந்தனர். யானைமுகம்படைத்த தாரகன் பிறக்க அவுணர்தழைக்குமாறு நல்லகாலம் வந்ததென்று மகிழ்ந்தனர்.

"தெற்றெனப்புகுந்தோர் பிடியுருக் கொடுசேரக்
கொற்றமால் களிற் றுருவினை முனிவனுங் கொண்டான்.
ஈரிரண்டு வாள்எயிற் றுடன் யானைமா முகத்துத்
தாரகா சுரன்தோன்றினன் அவுணர்கள் தழைப்ப."

தாரகன் வளர்ந்து வருநாளில் அவன் பெற்றோர் ஓரிரவில் ஆட்டுக்கடா, ஆட்டுப்பிணு வடிவங்கொண்டு முயங்கினர். அதன் பயனாக அசமுகி பிறந்தாள்.

"தகர்ப் பிணு உருக்கொள மாயை
பூண்ட அன்பினுன், சேச்சையின் உருக்கொடு புணர்ந்தான்,
புணர்ந்த காலையில் அசமுகி தோன்றினள்."

அப்பொழுது தீக்குறிகள் பலதோன்றின. அதனைக் கண்ணுற்ற இனத்தார் யாது நேரிடுமோ வென்று மனங்கலங் கினர். சிங்கமுகனும் தாரகனும் தமயனேடுபொருந்திப் பல வெற்றிகள் பெற்றுப் பெரிய வீரர்களாக விளங்கினர். அச முகி வரைவின்மகளாய்ப் பலரிடமோகங் கொண்டு குலத்திற் குத் தீங் கு விளைத்தனள்.

"பொறையில்லவள், அருளில்லவள், புகழில்லவள், சிறிதும்
நிறையில்லவள், நாணில்லவள், நிற்கின்றதொர் அறத்தின்
முறையில்லவள், வடிவில்லவள், முடிவில்லதொர் கற்பின்
சிறையில்லவள், உலகோர்க்கொரு சிறையாமெனத் திரிவாள்.

பொய்யுற்றவள், களவுற்றவள், புரையுற்றிடு சுரையூன்
துய்யுற்றவள், களியுற்றவள், சோர்வுற்றவள், கொலைசெய்
கையுற்றவள், விழியால் அழல் காலுற்றவள், பவத்தின்
மொய்யுற்றவள், படிறுற்றவள், முனிவுற்றவள், மனத்தில்."

இவர்கள் வரலாறுகள் வருமிடங் காண்க.

---

## கூறு III.

### கட்டுரை கூறல்.

சூரபதுமன், சிங்கமுகன், தாரகன் மூவரும் தந்தை, தாய், குருவையணுகி உறுதிமொழிகள் பல கேட்டனர். தந்தை சொன்மிக்க மந்திரமில்லையாதலின் காசிபர் பின்வருமாறு போதித்தனர்.

“ மக்களே, நீவிர் மூவரும் அறநெறியில் நிற்கவேண்டும். சான்றோர் ஆராயத்தக்க பொருள்கள் மூன்றே. அவை பதி பசு பாசமாம். மறைகளெல்லா முரைப்பன இம்மூன்றே. உயிர்களின்பொருட்டுப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும்ஐந்தொழில்களையுஞ்செய்யுங்காளகண்டனாகிய நின்மலப்பொருளே பதியெனப்படும். அவர் வேண்டுதல் வேண்டாமைமுதலான எண்குணங்களும் பொருந்தினவர். அவர் தன்மையை விரித்துரைத்தல் அரிதினுமரிது. பசுவென்பது உயிர். உயிர்கள் எண்ணில்லாதன. ஆணவம், மாயை, கன்மம் என்னும் முப்பாசங்களால் பந்திக்கப்பட்டுள்ளன. அநாதியாகவுள்ளன இருவினைவாய்ப்பட்டு உழலாநிற்கும். பலபிறவியும்எடுக்கும். எழுவகைத்தோற்றத்தையுமுடையன. கல்வியும், வீரமும், கற்பும், மலைபடு செல்வமும், வலிமையும், பிறவும் நிலையில்லாதன. அறமென்றொரு பொருளுண்டு. அது இம்மை மறுமை யின்பங்களைஎளிதிற் பயக்கும். அதனை ஒருமையாளர்க்கல்லது பிறர்க்குணர்த்தல் இயலாது. அறம் அன்புடன் சேர அருளெனுங்குழவி வந்துசேரும். தவம் பெருகும். உயிர் எம்பெருமானைச் சேரும். பிறவிதொலையும். பாசம் பாறும். பேரின்ப மெய்தும். ஆதலால் மாதவம் ஆற்றலே நல்லது.

" தவந்தனில் மிக்க தொன்றில்லை தாவில் சீர்த்
தவந்தனை நேர்வது தானுமில்லை, யால்
தவந்தனில் அரிய தொன்றில்லை, சாற்றிடில்
தவந்தனக் கொப்பது தவம தாகுமே.

பத்திமை நெறியொடு பயிற்றி மாதவ
முத்திபெற் றானடி முன்னுற்றோர் தமை
இத்துணையெனல் அரிது, இருமையும் பெறும்
மெய்த்தவர் மாலொடு விரிஞ்ச ளுதியோர்.

ஆதலின், மைந்தர்காள், அறத்தை யாற்றுதிர்,
தீதினை விலக்குதிர், சிவனை யுன்னியே
மாதவம் புரிகுதிர், மற்ற தன்றியே
ஏதுள தொருசெயல் இயற்றத் தக்கதே."

மனமொடுங்கி மாதவஞ் செய்து கடை முறை வீடு பேற டைந்தவர் சிலரே. தவத்தின் மேலான தொன்றில்லை. தவ முந் தவமுடையார்க் காகு மென்றனர் நாயனாரும். மக்களே, அறஞ்செய்மின், தீமை விட்டொழிமின். ஊழினையு முப்பக் கங்காண்பது தவமென்பதை மார்க்கண்டேயர் விளக்கினு ரன்றோ? யமன் வந்தழைக்கவும் சிறிதுமஞ்சாமல், என்னு யிரைக்காக்க இறைவனிருக்கையில் என்னைக் கொல்லவந்த தருமனுர் என்செயத் தக்கார் என்று துதிக்க, அவர் உயிர் பிழைத்தனரன்றோ. அன்று முதல் யமதருமன் சிவனடியா ரைக்கண்டு தன்னைப் புறங்காண்பவரென்று அஞ்சி ஒதுங் கிப்போவது வழக்கமாயிற்றன்றோ ! துறக்கம் புகவிரும்பின் தவவழி விடாதீர்."

பாருளார், விசும்பின் பாலார், பயனுகர் துறக்கமென்னும்
ஊருளார், அல்லா ஏனை யுலகுறு முனிவர் தம்மில்
ஆருளார் நின்னை யொப்பார், ஐய, நீ புரிந்த நோன்மை.
காருளார் கண்டத் தெந்தை யன்றிமற் றெவரே காண்பார்.

போற்றிடு தருமனைப் புராரி நோக்கியே
சாற்றிடு கின்றனன் தயங்கு கண்டிகை
நீற்றெடு புனைந்தெமை நினையு நீரர்பால்
கூற்றுவன் யானெனக் குறுகுவா யலே.

கண்ணருங் கதிபெறு நமது தொண்டரை
மண்ணுல கத்தவர் மனிதரே யென
எண்ணலை, யவர்தமை யாமென் றெண்ணுதி,
கண்ணுறின் அன்னவர் கழலில் வீழ்தியால்.

சொன்னவில் அடுபடைக் கூற்றன் பண்டுபோல்
இன்னமும் விலகுவ தென்கொலோ, எனு
மன்னருள் பெற்ற மார்க் கண்டன் மாக்கதை
பன்னினர் முன்னமும் படர்தற் கஞ்சுமால்.

அப்பெருந் திருமகன் ஆற்று நோன்பினுல்
தப்பரும் விதியினைத் தணந்து கூற்றுவன்
துப்பினை அகற்றியே தொலைவுகண்டு, பின்
எப்பொழு தத்தினும் இறப்பின் றுயினன்."

இதனைச் செவிமடுத்த மாயை நகைத்து, "'பாத்திரமறிந்து பிச்சையிடு' என்பது முதுமொழி. சிறுவர்களுக்குத் தக்க புத்திமதி சொல்லுதலன்றே பெரியார் கடன். செல்வம், வெற்றி, இன்பம், நீடூழிவாழ்தல் இவையல்லவோ சிறுவர் விரும்புவன. இல்லறத்தொழுகி யின்பம் முற்றப்பெற்றுத் துறவு பூண்டவர்க்கே துறக்க நெறி உரைக்கத்தகுவது. இம்மைப் பயன்க ளடையு மாற்றை விளக்குதிர்," என்றனள். அங்ஙனமாயின் 'அதனை நீயே இயம்பு வாயாக' என்று பணித்தனர். உடனே மாயை சொல்லத் தொடங்கினள். அன்னையும் பிதாவுமுன்னறிதெய்வம், தாயிற்சிறந்ததொரு கோயிலுமில்லை, ஆதலால் தாயுரையை மூவருங்கண்ணுங் கருத்துமாக விருந்து கேட்டனர்.

“என்னருமை மக்களே, கல்விச் செல்வம் பொருட் செல்வம் என்ற செல்வமிரண்டுள. பொருளிலார்க் கிவ்வுலக மில்லை. கைத்துடையான் காற்கீ ழொதுங்கு முலகு, என் றிருத்தலால் பொன்னும் புலமும்பொருளும் தேடுதல் முதற் கடன். கற்றல் கேட்டலுடையார் பெரியாராயினும் என்றும் வறியரே. அவர் செல்வரிடஞ் சென்றிரப்பர். பொருளுள தெனின் அது அறத்தையு மின்பத்தையு மாக்கும். அதனால் பீடும் பெருமையு மெய்தும். ஆதலின் பலவகைச் செல்வங் களையும் பெற முயலுவீராக. பொருள்செய் வகையையுங் கூறுவேன். கேண்மின். இடையறாது வேள்வி செய்மின். எம் பெருமானைத் துதிமின். இங்ஙனஞ் செய்விரேல் எம்பெரு மான் அருளொடு வெளிப்பட்டு வேண்டியன அருளுவர். வேள்விக்குரிய பொருளனைத்தையும் தருவேன். வேள்வி முறை யிது. மந்திரங்களிவையாம்” என்றுசொல்லி மூவரையு முத்தமிட்டு ஏகினள்.

1 மால்படு புந்தியில் மறுவில் சேதனம்
பால்படு முயிர்க்கெலாம் பவத்தின் மாண்பயன்
நூல்படு கல்வியின் நுவல் வளத்தினில்
மேல்படு கின்றதில் விழுமி தில்லையே.

2 பிறந்த நல்லுயிர்க் கெலாம் பெருமை நல்கிய
இறந்ததோர் பொருண்மைய திரண்டின் வண்மையும்
அறிந்தவர் தெரிவரேல் அரிய கல்வியின்
சிறந்தது திருவெனச் செப்பலாகுமால்.

3 சொற்றரு கலையெலாந் தொடர்ந்து பற்பகல்
கற்றவ ராயினுங் கழி நிரப்பினால்
அற்றவ ராவரேல் ஆக்கம் வேண்டியே
பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால்.

4 அளப்பருங் கல்வியும் ஆக்கம் யாவையும்
கொளப்படு தன்மையில் குறைவுறா தவை

வளர்த்தலின் மேதக வனப்புச் செய்தலில்
கிளத்திடின் மேலது கேடில் செல்வமே.

5 நூலுறு கல்வியை நனித்து நாடியே
வாலறி வெய்திய வாத்தி ஞோர்களும்
மேலுறு திருவொடு மேவுறு ரெனின்
ஞாலமங் கவர்தமை நவையுள் வைக்குமால்.

6 அளப்பரும் விஞ்சையே யன்றி மேன்மையும்
உளப்படு தருமமு முயர்ந்த சீர்த்தியும்
கொளப்படுகொற்றமும் பிறவும் கூட்டலால்
வளத்தினிற் சிறந்தது மற்றொன் றில்லையே.

7 ஆக்கமிங் கொருவரா லணுக வேண்டுமேல்
ஊக்க முண்டாவரே லுறுவ ரன்னது
நீக்கமில் கொள்கையில் நிற்பரே யெனில்
மேக்குறு பெருந்திரு விரைவில் மேவுமால்.

8 அவ்வளம் பலவகைத் தாகும், ஆங்கவை
எவ்வரும் பெறுகிலர் இயல்பில் யாவையும்
செவ்விதில் நீர்பெறச் சிந்தை செய்யுமின்,
உய்வது வேறிலை உறுதி யீதலால்.

9 செங்கண் மாலயன் முதல் தேவர்யாவரும்
எங்கள் நாயக னென இறைஞ்ச மேதகு
கங்கைவார் சடைமுடிக் கடவுள் போற்றியே
பொங்குதீ வேள்வியைப் புரிதிர், பற்பகல்.

10 மூண்ட இவ் வேள்வியை முயல மூவிரும்
ஆண்டுசென் றற்றழி யன்னதற்கு அவண்
வேண்டியபொரு ளெலாம் வேறு வேறதா
மீண்டற வுதவுவன், ஏகுவீ ரென்றான்.

11 தந்திர நெறிகளும் தவறில் பான்மையும
மந்திர முறைகளும் மற்று முள்ளவும்

இந்திர வளனுறும் இயல்பின் மூவர்க்கு
முந்திர வுதவிய முதல்வி நல்கினுள்.

பிள்ளைகள் இருமுது குரவரையும் வணங்கி விடைபெற்றுச் சென்றனர். பின்னர், தாய் சொற்றுறந்தால் வாசகமில்லை, என்றபடி வேள்வி செய்யத் தலைப் பட்டனர். சிங்கமுகனை நெற்றியினும், தாரகனைக் கடையிலு நிறுத்திக் காவல் செய்யுமாறு பணித்து, சூரபதுமன் வேள்வி வினையைத் தொடங்கி இந்திரன் மதிமயங்க வீரமாமகஞ் செய்துவர, அதனைக்கண்ட எம்பெருமான் யாகசாலையைக் குறுகி மூவர் கட்புலனுக்குத் தோன்றி, " வருந்துவதேன் " என்று வினவ, சூரபதுமன், " உலகெங்கும் என்னுளுகையிலிருக்க வேண்டும், உலகெங்குஞ் சுற்றிப் பார்த்துவர ஊர்திவேண்டும். நானெப்பொழுதுந் தளராத தேகவலியுடையனு யிருத்தல் வேண்டும் " என்ற வரங்களைக் கேட்டனன். இறைவனும் மகிழ்சிறந்து, "வேண்டியன பெறுக. உலகினையாள்க. இந்திர ஞாலத்தேரைப் பெறுக. பாசுபதப் படையைக் கொள்க. ஆணைச் சக்கரமும் சிங்கவூர்தியும் அடைக." என்றருள, சிங்கமுகனும் தாரகனுந் தோன்றியிறைஞ்ச, " நீவிரும் தமையனைப் போன்று யாவரையும் போரில் வெல்வீர், புறங்காட்டியோடச் செய்வீர், எமது சத்தியொழிய வேறென்றால் வெல்லப்பட மாட்டீர், பல படைகளையும் பெறுதிர் " என்று கருணை செய்து உருக்கரந்தனர்.

1 கொன்னுரும் புவிப்பாலாய்ப் பலபுவனங் கொண்ட
வண்டங் குழுவுக் செல்லாம்
மன்னுகி யுறல் வேண்டும், அவைகாக்கும்
தனியாழி வாலும் வேண்டும்
உன்னுமுன் அவையனைத்துஞ் செல்லுவதற்கு
ஊர்திகளு முதவல் வேண்டும்

என்றும் அழியாமல் இருக்கின்றமேனியும்
எற்கு ஈதல் வேண்டும்.

2 அலையாழி மிசைத்துயில்கூர் பண்ணவனே
முதலோர்கள் அமர் செய்தாலும்
உலையாது கடந்திடுபே ராற்றலொடும்
பலபடையும் உதவல் வேண்டும்
தொலையாமே எஞ்ஞான்றும் இருந்திடலும்
வேண்டுமெனச் சூரன் வேண்டக்
கலையார்வெண் மதிமிலைச்சுஞ் செஞ்சடிலத்
தனிக்கடவுள் கருணை செய்வான்.

3 மன்தனக் காயிர கோடி யண்டங்கள்
உளவாகும், மற் றவற்றுள்
அண்டமோ ராயிரத்தெட்டுக நூற்றெட்டு
ஆள்க வென அருளால் நல்கி
என் தொகைபெற் றிடுகின்ற வவ்வணடம்
பாப்பெங்கும் ஏகும் வண்ணம்
திண் திறல்பெற் றிடுகின்ற இந்திர ஞால
மதென்னுந் தேரும் நல்கி.

4 என்றுபல புவனங்கள் கொண்ட அண்டத்
தொகை தன்னை என்றும் போற்றக்
கன்னாது நேமியினும் வலிபெறு மோர்
அடலாழி கடிதில் நல்கி
அன்னவுறு சினவேற்றக் கோளரி யூர்தியும்
நல்கி அகிலத் துள்ள
விண்ணவர்கள் யாவருக்கும் அன்றுமுதல்
முதல்வனு மேன்மை நல்கி

5 மேற்றிகழும் வானவரைத் தானவரை
ஏனவரை வெற்றி கொள்ளும்
ஆற்றலொடு பெருந்திறலும் பாசுபத
மாப்படையே ஆதியாகித்

தோற்றமுறுகின்ற தெய்வப்படை யனைத்தும்
எந்நாளும் தொலைந்திடாமல்
ஏற்றமிகும் வச்சிரமாகிய மணிமேனியும்
உதவி, இதற்குப் பின்னர்.

6 ஆறுசேர் சங்கைதனை விண்ணுலகு
தனில் ஏவி அக்கங்கைக்கும்
கூறுசேர் பெருவேள்விச் செந்தழற்கும்
தோற்ற மெய்திக் குலவும் வண்ணம்
வீறுசேர் பெருங்கடல் போல் ஒரு பதினுயிர
கோடி வெள்ள மாகும்
தா று பாய் கரி திண்தேர் வயம்புரவி
அவுணரெனும் தானைநல்கி

7 சூர னென்பவன் தோளிணை போலவே
வீரமெய்தி விளங்கினாற் றெட்டுகம்
சீரின் மேவுதிர் தேவர்கள் யாரையும்
போரில் வென்று புறந்தரக் காண்டிரால்.

8 ஈ றுறாத வீரதமும், தன்பெயர்
கூறு தெய்வப் படையும் கொடுத்திடா
வேறு வேறு மிக அருள் செய்துமே
ஆறுசேர் சடை ஆண்தகை யேகினன்.

இவற்றையறிந்த அவுணர் மகிழ்ந்தனர்; ஆரவாரித்தனர்; தேவர்களும் 'சூரபதுமன் வாழி' என்று கூறினர். காசிப முனிவர் "மறையொழுக்க முடிவுற்றதோ? இதுவுந்திருவுள்ளமோ" எனமனநைந்து, தம்மக்கள் மூவரையும் பார்த்து உஞ் செல்வம் இடையறு வண்ணம் உங்குல குருவாகிய சுக்கிரனையடைந்து வரம் பெறுபின், வளம் பெறுமின்" என்று கூறினன். மூவரும் விரைந்து ஆசிரியனாகிய சுக்கிரபகவானையடைந்து மும்முறை வலம்வந்து பணிந்து

சின்றனர். 'எந்நாளும் நன்றாக வாழ்க' என்று வாழ்த்தி. சில நீதி மொழிகளைப் புகன்றனர். அவை இவையாம்.

"'உலகத்தில் பாசமென்றும், பசுவென்றும், பதியென்றுஞ் சொல்லுவார்கள். பந்தமென்பது மித்தையேயாம். ஆவியுஞ் சிவமு மொன்றேயாம், வேறில்லை. வினை, நல்வினை தீவினை, பிறப்பிற்கு வித்து; இன்பதுன்பங்கட்கு மூலம். உயிர் ஊழின்முறைமைக் கலந்து இருமையடையும் இருவினைகளை நாடுதலால் மீட்டுமீட்டு முயிர்கள் தோன்றும். அவற்றையறிந்து, வினைக்கீடாக இருந்து இறைவன் இன்பந் துய்ப்பிப்பான்.' இவையனைத்தும் பொய். பிறப்பதும் இறப்பதும் வினைகளைச் செய்வதும் எம்பெருமானுக்கில்லை. இவை உடம்பின் செயல்களேயாம். எம்பெருமான் எஞ்ஞான்றும் வேறுபாடின்றி ஒரு தன்மையாயிருப்பர். அறஞ் செய், அது தலைகாக்கும்; பாவமொழி, அது தீது; என்பன அறிவின்மையே. நேர்ந்தனவற்றைத் தீது, நன்று என்றெண்ணாமல் கடவுள் மாயை என்றெண்ணிச் செய்தலே முறைமை. மாயை வித்தாகாது. கனவிற் கண்டஃது நனவிற் தோன்றுதலிலது. மறுபிறப்பு என்பதும் பொய். பொய்யில் விளைவது மெய்யாகாது. உயிர்களெல்லாமொன்றே. பெரியர் சிறியர் என்றல் கூடாது. இவ்வுண்மைகளை ஞானிகளே அறிவர். தேவர்கள் உங்களுக்குப் பகைஞர். அவர்கள் வளங்களைத் தொலைமின். எண்ணிறந்த அவுணர்களை அழித்தவன் இந்திரன். அவனைப்பிடித்துச் சிறைப்படுத்துமின், முனிவர், தேவர், திக்குப்பாலகர் இவர்களை வென்று அவர்களுக்குப் பதிலாக அவுணர்களை ஏற்படுத்துமின். கொலை, களவு, காமம், வஞ்சகம் இவையொழித்தற் பாலனவல்ல. இவற்றினையொழிப்பின் உலகவரசை நீவிர் எய்தலிசையாது. உலகெங்குஞ் சென்று பார்த்து இறைமையைச் செய்மின்."

1 பாசமென்றும், பசுவென்று, மேதகு
ஈசனென்று, மிசைப்பர், தலையெனப்
பேசல் மித்தை, பிறிதில, ஆவியும்
தேக மேவு சிவனு மொன்றுகுமே.

2 தீயநல் லனவே யெனச் செய்வினை
ஆயிரண் டென்ப ரன்னவற் றேதுவால்
ஏயுமால் பிறப்பென்பர், இன்பக்கடல்
தோயு மென்பர், துயருறு மென்பரால்.

3 ஒருமையே யன்றி ஊழின் முறை விராய்
இருமையும் துய்க்கு மென்பர், அவ்வெல்லையில்
அரியதொல் வினையால் அவை மீட்டுமேல்
வருவதற் கென்பர், மன்னுயிர் யாவையும்.

4 ஈட்டு கின்ற யிருவினை யாற்றலால்
மீட்டு மீட்டும் விரைவில் உதித்திடும்,
பாட்டில் மேவும் பரிசுணர்ந்து அன்னவை
கூட்டும் என்பர், குறிப்பரிதாம் சிவன்.

5 சொற்ற ஆதியும் தோமுறு வான்தனை
உற்ற ஆவியு மொன்றல, ஒன்றெனில்
குற்றமாகும் அக்கோமுதற்கு, என்பரால்
மற்றதற்கு வான்முறை கேட்டி நீ.

6 ஆதி யந்த மின்றாகி யமலமாம்
சோதியா யமர் தொல்சிவன் ஆடலின்
காதலாகிக் கருதுதல் மாயை யால்
பூதம் யாவும் பிறவும் புரிவ னல்.

7 இடக்கொள் மாயையின் யாக்கைக ளாயின,
அடங்கவும் நல்கி யன்னவற் றூடுதான்
கடங்கொள் வானில் கலந்து, மற்றவ்வுடல்
மடங்கு மெல்லையில் மன்னுவன், தொன்மைபோல்.

8 இத்திறத்தின் என்ஞான்றும் அவ்வெல்லை தீர்
நித்த னுடன் நிலைமை புரிந்திடும்
மித்தை யாகும், வினைகளும் யாவையும்,
முத்தி தானும் முயல்வதும் அன்னதே.

9 பொய்ய தாகும் பொறிபுலம் என்றிடின்
மெய்யதோ அவை காணும் விழுப்பொருள்
மையில் புந்தியும் வாக்கும் வடிவமும்
செய்யநின்ற செயல்களும் அன்னதே.

10 அன்ன செய்கைகள் அன்மைய தாகுமேல்
பின்னர் அங்கதன் பெற்றியில் வந்திடும்,
இன்னல் இன்பம் இரண்டும் மெய் யாகுமோ,
சொன்ன முன்னைத் துணிபின ஆகுமே.

11 மித்தை தன்னையு மெய்யெனக் கொள்ளினும்
அத்தகுந் துயர் ஆனதும் இன்பமும்
நித்த மாகும் நிமலனை எய்துமோ,
பொத்தி லான பொதி உடற் காகுமோ.

12 தோன்று கின்றதும் துண்ணென மாய்வதும்
ஏன்று செய்வினை யாவதுஞ் செய்வதும்
ஆன்ற தற்பரற் கில்லை, யனையதை
ஊன்றி நாடின் உடற்குறு பெற்றியே.

13 போவதும் வரு கின்றதும் பொற்புடன்
ஆவதும் பின் அழிவதும் செய்வினை
மேவதும் எண்ணிலாத கடம் தொறும்
மேவு கின்றதோர் விண்ணினுக் காகுமோ.

14 அன்னபோல் எங்கும் ஆவியொன் றாகியே
துன்னி நின்றிடு தொல்பரன் வேறுபாடு
என்னதும் இலன், என்றமோர் பெற்றியான்,
மன்னும் அங்கது வாய்மை, யென்று ஓர்திநீ.

15 தஞ்ச மாகும் தருமநன் றாலென
நெஞ்ச கத்து நினைந்து புரிவதும்
விஞ்சு கின்ற வியன்பவம் தீதென
அஞ்சு கின்றதும் ஆம்அறி வின்மையே.

16 யாது யாதுவந் தெய்திய தன்னதைத்
தீது நன்றெனச் சிந்தைகொள் ளாதவை
ஆதி மாயையென் றாய்ந்தவை யாற்றுதல்
நீதி யான நெறிமைய தாகுமே.

17 தருமஞ் செய்க, தவறுள பாவமாம்
கருமஞ் செய்யற்க, என்பர் கருத்திலார்,
இருமை தன்னையும் யாவர்செய் தாலுமேல்
வருவ தொன்றிலை, மாயம்வித் தாகுமோ.

18 கனவின் எல்லையில் காமுறு நீரவும்
இனைய வந்தவும் ஏனை இயற்கையும்
நனவு வந்துழி நாம் கண்ட தில்லையால்
அனைய வாம் சிவன் ஆற்றுஞ் செயலெலாம்.

19 இம்மை யாற்றும் இருவினை யின்பயன்
நம்மை எய்தில் அன்றோ அடையப்படும்
பொய்ம்மையே அது, பொய்யிற் பிறப்பது
மெய்ம்மை யாகு மதோ சுடர் வேலினோய்.

20 நெறிய தாகும் இந் நீர்மை யெலாம், பிறர்
அறிவரே யெனின், அன்னதோர் வேலையே
பெறுவர் யாமுறும் பெற்றி யெலாம், அவை
உறுதி யுண்டெனில் உண்மைய தாகுமே.

21 சிறிய ரென்றுஞ் சிலரைச், சிலரை மேல்
நெறிய ரென்றும் நினைவது நீர்மையோ,
இறுதியில் உயிர்யாவும் ஒன்றே யென
அறிதல் வேண்டும். அஃது உண்மைய தாகுமே.

22 உண்மையே இவை ஓதியி னுருணர்
தன்மையாம் இனி நங்களுக்கு ஆகிய
வண்மையும் தொல் வழக்கமும் மற்றவும்
திண்மை யோடுரை செய்திடக் கேட்டி நீ.

23 தேவர் தம்மினும் சிதா ஞதியோர்
ஏவர் தம்மினும் ஏற்றம தாகிய
கோ இயற்கையும் கொற்றமும் ஆணையும்
ஓவில் செல்வமும் உன்னிடை யுற்றவே.

24 உற்றதோர் மேன்மை நா டிஉன்னைநீ பிரமமென்றே
தெற்றெனத் தெளிதி,மற்றத்திசைமுகன் முதலோர்தம்மைப்
பற்றலை, மேலோ ரென்று பணியலை, இமையோர் உங்கள்
செற்றலர், அவரை வல்லே செறு மதி, திருவும் சிந்தி. [னல்

25 இந்திரன் என்போன் வானோர்க்கு இறையவன் அவனேநென்
அந்தமில் அவுணர்தங்கள் ஆருயிர்கொண்டான்;அன்னோன் [னல்
உய்ந்தனன் போகாவண்ணம் ஒல்லையில் அவனைப்பற்றி
மைந்துறு நிகளம் † சேர்த்தி, வன்சிறை புரிதி மாதோ.

26 சிறையினை இழைத்துச் செய்யும் தீயன பலவுஞ் செய்து
மறைபுகல் முனிவர் தம்மை, வானவர் தம்மைத், திக்கில்
இறையவர் தம்மை, நாளும் ஏவல்கொண்டிடுதி, அன்னோர்
உறைதரு பதங்களெல்லாம் உதவுதி அவுணர்க்கு அம்மா.

27 கொலையொடு,களவுகாமம் குறித்திடு வஞ்சம் எல்லாம்
நிலையெனப் புரிதி, அற்றால் நினைக்குமேல் வருந்தீதொன்றும்
இலை,யவை செய்திடாயேல் இறைவ, நீ, விரும்பிற்றெல்லாம்
உலகிடை ஒருங்கு நண்ணு, உனக்கெவர் வெருவு நீரார்

28 வண்டுழாய் மிலைச்சுஞ் சென்னி மால்விடைப் பாகன் தந்த
அண்டமாயிரமே லெட்டும் அனிக ‡ மோடின்னே ஏகி

---

† சங்கிலி. ‡ படை

கண்டுகொண் டவண்நீ செய்யும் கடன்முறை இறைமை ஆற்றி
எண்திசை புகழமீண்டே ஈண்டுவீற் றிருத்தி; என்றான்.

இந்நீதிகளைக் கேட்ட சூரபதுமன் 'இது நல்லது. உம்முடைய பணிப்பின்படி நிற்பேன்' என்று உறுதி சொற்றனன்.

———

## கூறு IV.

## வெற்றிகள்.

கடல்போன்ற அவுணப்படைகள் சூழ்ந்துவர சூரபதுமன் தம்பிமார்களுடன் எங்கும் பரவி வெற்றிப்போர் நிகழ்த்தினன். முதன் முதலில் குபேரன் நகராகிய அளகாபுரியை வளைந்தனன். தூதுவர்கள் அதனைக் குபேரனுக் கறிவித்தார்கள். அவன் கேட்டு நடுக்கமுற்று, 'யான் உமக்கடிமை', என்று கூற, 'நீ இந்நெறி வழுவா திருப்பாய், ' என்று அவனை விடுத்தனன். அவன்படை அளகாபுரியுட் புகுந்து கொள்ளை கொண்டு அந்நகரத்தை மங்கிலிய மிழந்த கைம்பெண்ணினது கோலமடைவித்தது. கொள்ளைப்படை நகரை விட்டேகியவுடன் குபேரன் நாணி நகரை நண்ணினன். அளகையை நீங்கியதும் சூரன் இந்திரனைக்காவல் கொள்ளச் சென்றனன். இந்திரன் கரந்தனன். சூரன் இந்திரனுடைய நகரைக் கொளுத்தினன். பின்னர் சூரன் அக்கினி நகரையடைந்தான். 'சூரன் படையை யான் அழிப்பேன்' என்று அக்கினி அவுணப்படையைக் கொல்லத் துவக்கினன். தாரகன் சினங்கொண்டு சிவபடைக்கலத்தைச் செலுத்தினன். உடனே அக்கினி 'என்பிழையைப் பொறுப்பாய்' என்று வணங்கினன். அவுணர்கள் அக்கினிபுரியிற் புகுந்து கையிலகப்பட்ட பொருளனைத்தையும் வாரிக்கொண்டு அந்நகரை விட்டு நீங்கினர். அதன் பின்னர் யமபுரி நோக்கிச்சூரன்பாகனுகிய பலிங்கன் தேரைச் செலுத்தினன். அவுணப் படைகள் வருவதை அறிந்த தூதுவர்கள் யமனுக்குத் தெரிவிக்க, கூற்றவன் கலங்கி, 'குபேரனும்' அக்

கினி தேவனும் சூரனை எதிர்கொண்டு புகழ்ந்து போயினர். அங்ஙனஞ் செய்தலே எனக்கு மழகு என்றெண்ணி நல்வரவு கூற, சூரன் மகிழ்ந்து 'நம்பணிசெய்து ஈண்டே யிருக்குதி' என்றனன். அவுணப்படைகள் காலனூரைக் கலக்கிக் கடைந்து கண்ணுக்குப் புலப்பட்ட பலவற்றையுமெடுத்துச் சென்றனர். அதன்மேல் நிருதிநகர்மீது சூரப்படைகள் சென்றுவாட்ட, நிருதி, எதிரியின் வலிமையை யறிந்து 'உன் சுற்றம் யான்' என்று சூரனிடமுரைத்துத் தாரகன் மருங்கிற் போயினன். வருணனும் வாயுவும் கடலிலும் பூமியிலும் புகுந்தனர். அன்னுருலகைச் சூறையாடியபின் சூரன் படை நாகலோகம் நோக்கியது. ஆதிசேடன் அதனை எதிர்த்தனன். அவனை வெற்றிகொண்டு அவன் வைத்திருந்த அமுதத்தை வலிதிற் பெற்றுண்டு, பூவுலகுக்கேகி, பின்னர் பாற்கடலினுறையும் திருமாலை அச்சுறுத்த, திருமால், 'இத்தீயர் நம் வலியையுங் காண வந்தனர் போலும், இவர் வலியைக் காண்போம்' என்று சீறி, தாரகன்மீது பாணங்களைப் பெய்துவர, தாரகன் வில்லை வளைத்துத் தாய் போதித்த மந்திரங்களை நினைத்துப் போர்புரிய 'தாரகன் வலியன், யார் இவனெதிரில் நிற்பர்' என்று பின்னடைந்தனர். 'எமக்கு நீர் உறவினர்' என்று புகழ்ந்து போயினர். சூரன் தாரகனைத் தழுவி நிகழ்ச்சிகளைக் கேட்டு மகிழ்ந்து தன் படையுடன் சக்கரவாளகிரி கடந்து துறக்கஞ் சென்றனன் தூதுவர் நிகழ்ந்தனவற்றை அறிவிக்க இந்திரன் அறிவு சோர்ந்தனன், 'இவனோடு பொருது, உயிரை மாயேன். அவன் என்னைச் சிறைசெய்வான்' என்றஞ்சி இந்திராணியோடு குயிலுருக்கொண்டு பறந்து போயினன். இவனைக் காணாததனால் அவுணர்கள் தேவர்களைப் பலவாறு வதை செய்தனர். தேவர்கள் சூரனை வணங்கி, 'சிவனருள் பெற்ற

பலரும் உமக்கடிமையாயினர். நீர் எம் வழிபடுகடவுள்; எம்மைக் காப்பது உம் கடன்' என்று வழுத்தினர். 'நன்று, நன்று' என்று சூரன் கூற, அவுணப்படை இந்திரனுடைய வனத்தினைக் கவர்ந்து சென்றது. அதன்பின் அது சத்திய வுலகம் புக்கது. பிரமாவும் 'உன்னை யொப்பவர் உலகத்தி லிலர், நீ என் மகன் பிள்ளை; எனக்குப் பேரன்; யான் உன் பாட்டன்' என்று முறை செப்பினன்.

"பொன்னை மேவு பொலன் கெழு மார்பன்
தன்னை வானவர் தங்களை எல்லாம்
இன்ன நாள்இவை யோற்கொடு என்றாய்,
உன்னைநே ருளரோ உல கத்தில்,

காதலால் மிகு காசிபன் மைந்தன்
ஆதலால் அவுணர்க்கு இறை, நின்மூ
தாதை யான், சரதம் இது, நின்சீர்
ஏதம் என் புகழ், யான் பிறன் அன்றே."

சூரன் பெருமகிழ்ச்சி யடைந்தனன். அவன் சிவலோகஞ் செல்ல, சிவபெருமான், 'சூரனே நீ ஏனை இடங்கட்குஞ் சென்று எத்திசையும் புகழ அரசு புரிவாய்' என்றருளினர்.

"கண்ட நஞ்சடைய அண்ணல் கருணைசெய்து இனிநீ ஏனை
அண்டமுஞ் சென்று நாடி ஆணையால் அகிலம் யாவும்
எண்டிசை புகழுமாற்றால் இறை புரிந்து இருத்தி என்னப்
புண்டரீ கத்தான் போற்றி விடைகொண்டு புறத்து வந்தான்.

பின்னர் சூரன் அண்டங்கள்தோறும் அவுணர்களை அரசர்களாக்கி ஆளும்படி செய்து தன்னிடந் திரும்பினன்.

" ஏனையண் டங்களெல்லாம் எம்பிரான் கணமா யுள்ளோர்
ஆனவர் அருளிற் போகி. அகிலமூநாடி, அங்கண்
வானவர் தம்மை வென்று, வளமெலாம் கவர்ந்து தன்பால்
தானவர் பலரை அங்கண் தன்னரசளிப்ப உய்த்தான்.

இத்திறம் வீற்று வீற்று எல்லையில் அண்டந்தோறும்
மெயத்தம ராகியுள்ள அவுணரை வேந்தராக
வைத்தனன், துணைவரோடு மீண்டனன்."

---

## கூறு V

## முடிசூட்டுதல்.

பலவிடங்களிலும் போர்செய்து வெற்றி பெற்றுப் பெரும்பொருள் திரட்டி வெற்றிக் கொடி யுயர்த்திச் சூரன் ஊர்வந்துற்றதும், தான் உறைவதற்கேற்ற ஊர் சமைக்குமாறு தேவதச்சனுக்குப் பணித்தனன். உடனே அவன் ஊருக்கு எல்லை கூறுதி என்றனன். குலகுரு சுக்கிரன் அதனைக்கூற, தென்கடலையடைந்து மலைகளால் அதனைத் தூர்த்து சமப்படுத்திப் பொன்மதில்களையும், வாயில்களையும், கோபுரங்களையும், வீதிகளையும், மாடங்களையும், சாலைகளையும், சோலைகளையும், வாவிகளையும் அமைத்து நடுவணே அழகுற வொரு கோயிலையும் இயற்றினன். இக்கோயிலி னொளியினாற் பொன்னுலகமும் பொலிவுகுன்றிய தென்பர். இந்நகருக்கு இவற்றையமைத்தவன் 'வீரமகேந்திரபுரம்,' என்ற பெயரைச் சூட்டினன். அதனைச்சுற்றி எண்புரங்களை யமைத்துப் பின்னர் வடகடலினடுவில் 'ஆசுரம்' என்ற நகரைச் சிங்கமுகனுக்கும், நாவலந்தீவில் ஏமகூட மலைச்சாரலில் 'மாயாபுரம்' என்னும் நகரத்தைத் தாரகனுக்கும் உண்டாக்கினன்.

சூரன் வீரமகேந்திரத்தினுட் புகுந்து தேவதச்சனுடைய பணித்திறனைப்புகழ்ந்து கோயிலிற் குடிகொண்டனன். 'அரசனுக்கு முடிசூட்டுதும்' என்றுதேவர்கள்விரும்ப, சூரபதுமன் படைபுடைசூழக் கடலாடிப் பட்டுடுத்து மாலைசூடி, அணிபூண்டு, அசுரேந்திரனும் சுக்கிரனும் புகழப், பீடமேறியுட்காரப் பாட்டன் கையால் முடி சூட்டப் பெற்றான்

“ நிக ரிலாத நிருதர்க் கிறை தொழப்
புகரு மாமுனி வோரும் புகழ்ந்திட
மிக நடுங்கிய விண்ணவர் போற்றிட
மக பதிக்கு மனந்தளர் வெய்தவே.

வந்து சிய மணித்தவிசு ஏறினன்
அந்த எல்லையில் அச்சுதற்கு ஆமெனும்
இந்திரத் திரு மாமுடி எந்தியே
சுந்தரத் தொடு நான்முகன சூட்டினன்.„

பொன்மாரி, பூமாரி பொழிந்தன. அரசன் ‘இருங்கள், இருங்கள்’ என்று பெரியோரை வேண்ட அவர்கள் தத்த மிடங்களில் அமர்ந்தனர். தம்பிமார்களுடைய ஆணைப்படி இந்திரன் காளாஞ்சியெடுத்தும், குபேரன் அடைப்பை தாங் கியும் வாயு கவரிவீசியும், அசுரேந்திரன் உடைவாள் பிடித் தும், சூரிய சந்திரர் வெண் கொற்றக் குடையெடுத்தும், வருணமக்கள் ஆலவட்ட மேந்தியும், கருடர் சித்தர் பாடி யாடியும், யமனும் அக்கினியும் சந்தடிவிலக்கியும், நிருதி கெண்டியை யேந்தியும் நிற்கக் குருவும் முனிவரும் கலசத்தி லுள்ள நீரை அறுகிற்றோய்த்துத் தூவி வாழ்த்தினர்’ என்று இன்னனைய பலபுனைந்து ஏத்தும் புலமை வாய்ந்த பெரியார் கூறியுளர். முடிபெற்ற அரசன் பலருக்கும் பல கட்டளைகளையிட்டுப் பணியிற்றவரு தொழுகும்படி வெவ்வே றுகப் பணித்தலும், ‘அப்படியே செய்வோம்!’ என்றுசொல்லி யமர்ந்தனர்.

“ அரசு செய்தலும் அந்தர நாதனும்
சுரரும் ஏனை முனிவரும் தொக்குறீஇ
வரைசெய் மாட மகேந்திர மாபுரத்
தொருவ னேவலின் முன்னம் *ஒழுகுவார்.”

* குறிப்பு.

## கூறு VI.

## மணமூ மக்கட்பேறும்

சூரபதுமன் வெற்றிக் களிப்புற்றுத் தேவர்களை ஏவல் கொண்டு உன்னத நிலையி லிருக்கும்பொழுது திருமணஞ் செய்ய நினைத்தான். குல குருவிடஞ்சொல்ல, சுக்கிரர் பல முறை ஆராய்ந்து பார்த்துத் தெய்வத்தச்சன் மகள் பதும கோமளையென்பவளை மணப் பேசி முடித்துத் தேவர்கள் பலருங்கூடிவந்து விதிப்படி மணத்தை நடத்தினர். மணமக்கள் இருவரும் இன்புற்று வாழ்ந்தனர். பதுமகோமளை கருவுற்று வயிறு வாய்த்து ஒன்பது திங்கள் கழிந்ததும் செல்வப்புதல்வனைப் பெற்றாள். அரம்பையரும் அவுணமாதரும் அழகுவாய்ந்த குழவியைத் தொட்டிலிலிட்டுக் கண்வளரச் செய்வர். ஒரு நாள் ஞாயிற்றின் கதிரொளி தொட்டிலிற் றூங்கிய பிள்ளை மேற்படவும், அது வெகுண்டு சூரியனைப் பற்றிப்பிடித்துச் சிறை செய்தது. பிரமா தன் படைக்கலத்தைக் கொடுத்துப் பகலவனைச் சிறையினின்றும் நீக்கி இருள் மூடிய உலகில் ஒளிபரப்பச் செய்தனன். பானுவைச் சிறை கொண்ட நிமித்தம் பையனுக்குப் பானுகோபன் என்ற பெயர் வழங்கியது.

> " அதுபொழுது அவுணர் கோமான் ஆற்றிய தவத்தின் சீரால்
> பதுமகோ மளை யென்றோதும் பாவைதன் உதரம் போந்து
> புதுமதிக் குழவி யேபோல் பொற்பொடு பொலிந்து முன்னர்
> மதலையங் கொருவன் வந்தான் மறலிக்கு மறலிபோல்வான்.

> " பானுகோபன் என்றொரு பெயர்பெற்ற அப்பாலன்
> மானைநேர்விழி மங்கையர் மதன்என மயக்க

ஆனபேருரு எய்தியே அம்புயத் திருவின்
கோனெடே பொரு தவன் தனைப் பெருந்திறல் கொண்டான்."

பானுகோபனைப் பெற்றபின்னர் பதுமகோமளை அக்கினி முகனையும், அதற்குப்பின் வச்சிரவாகுவையும், இரணியனையும் அதற்குப்பின் பெற்றனள். இளமன்னர்களுடன் கோமானும் பட்டத்து மனைவியும் மகேந்திரபுரியில் வாழ்ந்து வந்தனர். சூரபதுமன் துர்க்குணன், தருமகோபன், துன்முகன், சங்கபாலன், வக்கிரபாலன், மகிடன் முதலானோரை அமைச்சர்களாகத் துணைக்கொண்டு அரசு செய்தனன்.

தம்பி சிங்கமுகனுக்கு யமனுடைய மகளாகிய விபுதை யென்பாளையும், தாரகனுக்கு நிருதியின் புதல்வியாகிய சவுரியையும் மணமுடித்து, அவரவர் நகர்களிலிருந்து வருமாறு கட்டளை யிட்டனன். அங்ஙனமே அவர்களிருவரும் முறையே ஆசுரபுரத்தையும், மாயாபுரத்தையு மடைந்து அரசாண்டுவந்தனர். சிங்கமுகனுக்கு விபுதை யென்னும் பட்டத்தேவியிடம் அதிசூரன் என்ற புதல்வன் பிறந்தனன். அவனுக்கு இளையவனுன தாரகனுக்குச் சவுரியென்னும் பெருந்தேவியிடம் அசுரேந்திரன் தோன்றி அழகனுய் வளர்ந்து, வீரனுக விளங்கினுன். நீதி தவருமல் ஒழுக்கங் கைப்பிடித்தவனுய், பழிபாவ மஞ்சினவனுப், கள்ளிவயிற்றில் அகில் பிறக்கு மென்ருற் போல பண்பும் மாண்பும் அமைந்த மகனுய், எவருந்துதிக்க இசைபெற்று வாழ்ந்தனன்.

மூவருக்குந் தங்கையாகிய அசமுகி வரைவின்மகளாய் துன்முகியாகிய தோழியுடன் அழகிற் சிறந்த ஆடவர்களை நாடிக்கூடிக் குலத்துக்குக் கோடரி யாயினள். ஒரு நாள் துருவாச முனிவரைப் பார்த்து, உம்முடன் மகிழ்வோடு

சேர்ந்து புதல்வரைப் பெறும்படி வந்துளேன் என்றனள். அவர் இவள் சூரனுடைய தங்கையென்றறிந்து, உன்னைக் கூடுவேனாயின் என்தவமழியும், பழியும் பாவமும் வந்துறும், என்றனர். அசமுகி முனிவர்சொல்லைச் செவியில் வாங்காமல், அவரைப் பற்றிப்பிடித்துத் தழுவினள். அப்பொழுது, அவள் கருவுற்று வலிமை மிகுந்த இரண்டு மக்களைப்பெற்றனள். அன்னார் முறையே வில்வலன், வாதாவி யென்னும் பெயரைப் பெற்றனர். இவ்விரு மக்களும் சூரபதுமனிடஞ் சென்று 'நாம் உன் மருகர், வேறல்லர்' என, அரசன் அவர்களைத் தழுவி, 'மருகர்களே, என்னுடனிருங்கள்' என்றனன். பின்னர் இருவரும் துருவாசரையணுகி, 'உம் தவத்தை எங்களுக் கருளும்,' என்றனர். அவரிணங்கவில்லை யாதலின் உம்மைக் கொல்வோமென்றனர். 'முனிவர்களுக்கு இடரே செய்துவாருங்கள். உங்களுயிரைக் கவர்வர் அகத்திய முனிவர்' என்று அவர் சபித்தனர். அவ்வாறே இருவரும் அம்முனிவர் கோபத்துக்காளாகி வாதாவி அவர் வயிற்றுத் தீக்கு இரையானான்; வில்வலன் அவருடைய சிவப் படைக் கலத்தா லிறந்தான்.

1 தாயின தருவாயும் தந்தைதன் உருவாயும்
மேயின இருமைந்தர் வில்வலன் வாதாவி
ஆயதோர் பெயர் பெற்றோர் அன்னைதன் உரைகொண்டே
தூயதோர் குரவோன்றன் துணையடி பணிகுற்றார்.

2 இறுதி செய்திட வுன்னி இகலுட னெழுகின்ற
சிறுவர்கள் செயல்நாடிச் சினமொடு முனி நீவிர்
மறுவறு தவருக்கே வைகலும் இடர் செய்வீர்,
குறுமுனி நுமதாவி கொள்ளுக இனியென்றான்.

3 வீடுறு முனிவர் ஊன்மிசைந்து தொன்மைபோல்
ஆடென முனியென அனையர் மேவியே

நாடோறும் இச்செயல் நடாத்தி யுற்றனர்
கேடறு முனிவர்தம் கிளைகள் மாளவே.

4 எண்ணுமலே முன்பு கடலுண்டதேபோல
எனதுனு முண்ட கொடியோன்,
உண்ணுடு முயிர்கொண்டு வலிகொண்டு குறிதான
உதரங் கிழித்து வருவன்,
அண்ணு வில்வலனே எனக்கூறியே, தம்பி
அரிபோல் முழங்கி யிடலும்,
மண்ணுடர் புகழ்கும்ப முனிதீயர் செய்; திட்ட
மாயந் தெரிந்து வெகுள்வான்.

5 ஊன் கொண்ட கறியாகி, நுகர்வுற்ற வாதாவி
உயிர்போகி, உண்ட, இயல்பே
தான் கொண்டு முடிகென்ற சடரத்தை † யொருகாலைத்
தமிழ்வல்ல முனி தழுவலும்,
கான் கொண்ட எரிமண்டு சிறுபுல் புதற்போன்று
சடியோனு முடிவாகவே,
வான் கொண்ட லெனவங் கண்முன் னின்றவன்,
தம்பி மாய்வுற்ற துன்னி, வருவான்.

6 மெய்க்கொண்ட தொன்னு ளுருக்கொண்டு முனிதன்னை
வெகுளுற்று ஓர்தண்ட மதனைக்
கைக்கொண்டு கொலையுன்னி வருபோழ்தில், முனிவன்
கரத்தில் தருப்பை யொன்றை
மைக்கண்டர் படையாக நினை குற்றுவிட வில்
வலன் தானும் மடிவெய்தலும்,
அக்கண் டகக்கள்வர் உறையுற்ற விட நீங்கி
அப்பால் அகன்றன னரோ.

---

† வயிற்றை

# கூறு VII.

## அரசிருக்கை

சூரபதுமன் வீரமகேந்திரத்தில் தனக்காகச் சமைக்கப் பெற்ற கோயிலில் அரசு வீற்றிருந்தான். அந்நகரின் வட வாயிலில் கோரனென்றும் அதிகோரனென்றுஞ் சொல்லப் படும் இரண்டவுணவீரர் காவல்கொண்டிருந்தனர். கிழக்கு வாயிலும் வாட்படையேந்திய வேதிக்கண்ணன், வீரபாகு வென்னுந் தானைத்தலைவராற் காக்கப்பட்டிருந்தது. இது போன்றே மற்றிருவாயில்களிலும் அவுணவீரர்களும் சேனை களும் காவல்செய்திருந்தனர். பொன்னாற் செய்து நானுவித மணிகள் இழைக்கப்பெற்று ஒளி வீசாநின்ற அத்தாணி மண் டபத்திலே சிங்கத்திறாற் றாங்கப்படு மிருப்பிலே மேனகை திலோத்தமை முதலாகிய தெய்வப்பெண்கள் சாமரங்கள் வீசவும், சூரிய சந்திரர்கள் முத்துக்குடைகளைத் தாங்கி இருமருங்கிலும் நிற்கவும், அவுணர்கள் அடைப்பை, கெண்டி, பூந்தட்டு, உடைவாளாகிய இவைகளை ஏந்திப் பிடித் துக்கொண்டு நிற்கவும், பானுகோபனுந் அவனுடைய தம்பி யர்களும் ஏனையோரும் முறையாகப் பக்கத்திலிருக்கவும், காவிதிகளும் ஒற்றுவர்களும் படைத்தலைவர்களும் பக்கமெங் கும் பரவிநிற்கவும், அரம்பையர்கள் நடிக்கவும், கின்னர், இயக்கர் முதலானோர் வீணைதடவவும், துதிப்பவர் துதிக்க வும், எள்ளிடவுமிடமிலாதவாறு கூட்டங்கள் நிறையவும், மணிமுடி தலைமீது மிளிரவும் காதுகளிற் குண்டலங்கள், தொங்கவும், நீறு நிறையப் பூசிய நெற்றி விளங்கவும், மார் பிலே முத்துமாலைகளும் அடுக்கடுக்காகப் பதக்கங்களும்,

தோளிலே வாகுவலயங்களும் கையிலே கடகங்களும், கழுத்திலே முத்து வடங்களும், கால்களிலே வீரக்கழல்களும் உடம்பெலாம் சாந்து கமழவும், அரையிலே பட்டினல் இடுப்புக்கட்டுப் பொலியவும், பலவிதங்களிலும் அலங்கரிக்கப்பட்டுச் சூரபதுமன் வீற்றிருந்தான்.

1 பாங்குறு தவிசின் பாலில் துணைவர் 1 பங்கயன் மால்தம்மை
ஈங்கினிது இருத்திர், என்ன இருந்தனர், எவலாலே
ஓங்கிய மகவான் கொண்டான்களாசி, 2 யொள்நிதியின் கோமான்
தாங்கினன் அடைப்பை, மற்றச் சமீரணர் கவரிகொண்டார்.

2 நிருதர்தம் குரிசிலான நெடுந்தகை உடைவாள் கொண்டான்,
பரிதியு மதியும் அங்கண் பனிக் குடை நிழற்றி நின்றார்
வருணனு மகாரும் ஆலவட்டம் வீசினர், யாழ்வல்ல
கருடர் கந்தருவர் சித்தர்,கானம் அங்கிசையா நின்றார்,

3 முத்தலை அயில் வேல் ஏந்தி முறைநெறி யாற்றும் கூற்று
மெய்த்தழல் கடவுள் தானும் 3மேத்திரம் ஏந்தி, ஆண்டும்
எத்திறத் தவரும் நீங்க எரிவிழித் திடியின் ஆர்த்தும்
பத்தியில் நிறுவிச்சூரன் பல்புகழ் பாவி நின்றார்.

4 குரைகழல் நிருதியென்போன் கோடிக 4மதுகைக் கொண்டான்
இருமைசேர் குரவர்தாமும் எல்லைதீர் முனிவர் யாரும்
திரைகெழு கங்கைத்தூநீர் செம்பொன்அம் கலசஞ் சேர்த்துத்
திருவையின் 5 மறையால் வாங்கித் துவலைதூர்த்தரசி சொற்றார்

5 அரம்பைமே னகையே மிக்க உருப்பசி யாதியாகி
வரம்பறும் அமரர்மாதர் வரன்முறை விதியில் நாடி
நரம்பியல் சுருதி பாடல் இயத்தொடு படிந்து நண்ணி
திரம்பயில் நடன மூன்றும் செவ்விதில் புரிய லுற்றார்

6 இத்திறம் அமரர்யாரும் ஏனையர்தாமும் ஈண்டித்
தத்தம தரிமை தன்னைத்தவா நெறி தலைக்கொண் டாற்ற

---

1 விரைகுவர் 2 படிக்கம் 3 கெண்டி, 4 பூந்தட்டு 5 ஆட்டுக்கடா

மைத்தகு சூரபன்மன் மடங்கல் * அம் தவிசின்மீதே
மெய்த்திரு நிகழ மன்னிப் பின்னிவை விளம்ப லுற்றான்.

7 தூர்க்குணன் தரும கோபன் துன்முகன் சங்கபாலன்
வக்கிரபாலன் தீய மகிடனே முதலோர் தம்மைத்
தொக்கமந் திரிக ளாகத் துணைக்கொடே சூரபன்மன்
மிக்கவானவர்கள் போற்ற வீற்றிருந் தரசு செய்தான்.

---

* சிங்கம்.

## கூறு VIII.

### கொடுங்கோல்.

சூரபதுமன் தங்கை அசமுகி சீர்காழியில் தவம்புரிந்து கொண்டிருந்த இந்திரன் மனைவியாகிய அயிராணியைப்பற்றி யிழுத்துச் சூரபதுமனிடங் கொண்டுவர முயன்றாள். அப்பொழுது இந்திரனேவலாளாகிய வீரமாகாளர் அவள்கையை வெட்டினர். குருதி சொரிந்தது அவள் தமையனிடம்வந்து அழுதுபுலம்பினள். "இந்திரன் மீன்சுமந்து பழிக்கஞ்சி வெருவியொளித்தனன்; உட்பகைகொண்டு ஆளனுப்பி என்கையைத் துணித்தனன். அந்த வீரமாகாளன் உங்களையும் அழிப்பான்." உலக காவலனாகிய அண்ணாவே, 'கையிழந்த யான் உயிர்வைத்திருத்தல் தகுமோ, உயிரைவிடுவேன், பெண்ணாகப்பிறந்த பயனிதுவோ' என்று சொல்லித் தமையன் கால்களில் வீழ்ந்து புரண்டாள். பேயும் பெண்ணுக்கிரங்குமாயின் உடற்பிறப்பின் துயரத்தைப் பொறுத்தல் கூடுமோ? அஃதன்றி, அவளுக்குத் துணையாயிருந்த துன்முகிகையுந் துணிக்கப்பட்டிருந்தது. சூரபதுமனுடைய கண்கள் சிவந்தன, வாய் புகையை உமிழ்ந்தது, மூக்கினின்று நெருப்புப்போன்ற மூச்சு வெளிவந்தது, பற்கள் உதட்டை மறைத்தன, வியர்ப்பு மிகுந்தது, உலகங்கள் நடுங்கின. 'இந்நிலவுலகத்திலே இவர்களுடைய கைகளை வெட்டியது என்னுடம்பிற் செய்த வூனமன்றி வேறுண்டோ? இதனை என்னுயிர் பொறுப்பதா? என்னரசியல் முறை நன்று, நன்று,' என்று சூரபதுமன் சொன்னான். அதைக்கேட்ட அருமைப்புதல்வனாகிய பானுகோபன், தந்தையை நோக்கி, 'ஐயனே, மனத்திற் கொண்ட

கோபத்தைத் தீருதி. இவர்கள் கைகளைத் துணித்த ஆடவனையும், உனக்குக் காமநோயையளித்த இந்திராணியையும், கள்வனுகிய இந்திரனையும், இறைப்பொழுதிற் கொண்டு வருவேன்' என்றுகூறி விடைபெற்றேகினுன். சூரபதுமன் பிரமனை அழைத்துக் காட்டவும் அவர் இவர்களுடைய 'கைகள் கூடுக' என்றனர். ஒரு நொடிப்பொழுதில் அவை வளர்ந்தன. உடனே பானுகோபனுடன் அசமுகியை அனுப்பி, அவளுக்கு ஆபத்து நேர்ந்த இடத்தைக்காட்டும்படி பணித்தனன். பல ஏவலர் இந்திரனையும் இந்திராணியையுந் தேடிப் போயினர். 'இந்திரன் விண்ணுலகைவிடுத்துப் பூவுலகில் சீர்காழியில் தவம் புரிந்துகொண்டிருந்தனன், பின் கைலை சென்றனன், எம்பெருமானது கருணைபெறுமாறு தவஞ்செய்தனன் என்று கேள்விப்பட்டுத் தேவர்களை வரவழைத்துக் கொடூரமான பலவகைத் தண்டஞ்செய்தனன். சிறையிலிருந்து அசுரரை வரச்செய்து இந்திரனேடு சேராதிருக்கவும், 'என்றும் எம்பணி வழிநிற்கவுங் கடவீ' ரென்று கட்டளையிட்டுத் தன்னுறையுளிற் சென்றுன்.

1 சீக்கா துறைதனி நாயகன் நெடுமால் அயன் உணரா
ஓங்கார முதல் பண்ணவன் உறையுங் கிரிசெல்லப்
பாங்காய் அணங்கினர் போற்றிடப் பயில் காழிவனத்தில்
பூங்கா வனந்தனிலே சசி யிருந்தே தவம் புரிந்தாள்.

2 கொலையார் இசையளி பாடிய குழல் இந்திரன் பிரிவால்
உலையா மனம் பதையாத் தவத்துறை நின்றதோர் அளவில்
வலையார் கலி யுலகந்தனில் வாழ்சூர பன்மாவுக்கு
இலையாள் பலர் இலையார் புணர்ந்தாலுஞ் சிறிது இலையாள்.

3 கழிகின்றதோர் கடலே புரைகாமம் தெறு நோயால்
அழிகின்றவன், எவர்தம்மையும் வலிதே பிடித்தணையும்

இழிகின்றதோர் கடியாள் அசமுகி யென்பதோர் கொடியாள்,
இபல்பாள் முகிலினம் வாய்திறந்தெனவே மொழிகின்றதோர்.

4 மாலுற்றிட வாழ்சூர பன்மாவின் கிளைமுழுதும்
மூலத்தொடு முடிவித்திடு முறை சூழ் வினை யென்னச்
சூலத்தினை ஏந்தித்தனி தொடர்தூன் முகியுடனே
ஆலத்தி னது உருவா மென ஆங்குற் றனளன்றே.

5 அந்தா, இவள் அயிராணி, நம்மரசன் தனக்கு அஞ்சி
நந்தா வளந் தனைப் பெற்ற பொன் நகரத்தை விட்டிங்கே
வந்தாள், இவள் தன்னைக் கொடுவருவீ ரென எங்கோன்
முந்தா தரமுடன் உய்த்தனன் முடிவற்ற தன்படையே.

6 பொன்னோடு இகல் பங்கேருகம் பூங்கோமளை தனையும்
அன்னோன் வெறுத்திடுவன், பிறரனைவோரையும் அஃதே,
உன்னோடு அளவறு காதலின் உறும், இங்கிது சாதம்,
என்னோடு இனிவருவாய் கடிதென்றாள், அறங்கொன்றாள்.

7 ஏடி, நீ இவண் இசைத்த தீமொழி
நேடி யோர்ந்துளார் நிரய மாநெறி
ஊடு சேர்வரால் உரைத்த நிற்கு மேல்
கூடு தீமையார் குறிக்கற் பாலரே.

8 இந்திரற் கலால் ஏவர் பாலினும்
சிந்தை வைத்திடேன், தீதில் கற்பிலேன்,
வந்தெனக் கிது வகுத்தி, நின்கிளை
உந்திடத் தகு முறைய தன்றிதே.

9 வெய்யவன், அவ் வயிராணி மென்காம்
கையிற் பற்றியே கடிதில் ஈர்த்துராய்
மொய்யிற் போயினான், முரணிலாதவள்
ஐயகோ, வென அரற்றல் மேயினள்.

10 ஓய்யெனச் சசி இவ் வாற்றால் ஒலிட, அதுகேட் டெங்கள்
ஐயனைக் குறித்துக் கூவி யரற்றுவாள் போலும் என்ன

மையினைத் தடுத்துச்சிந்து மருத்தென வந்தான், என்ப
வெய்யரில் பெரிதும் வெய்யோன், வீரமாகாளன், என்போன்.

11 சாத்தன தருளில் நிற்கும் தானையத் தலைவன் வானோர்
வேத்தவை யான வெல்லாம் வியத்தகு வீரன், உந்தி
பூத்தவன் முதலோர்யாரும் புகழ வெவ் விடத்தையுண்டு
சாத்தவ னுமம் பெற்றோன் காலற்குங் காலன்போல்வான்.

12 கொம்மென வந்த வீரன் கூவிய சசியை நோக்கி,
'அம்மனை' அழுங்கல் 'வாழி' அசமுகி என்னும் வெய்யாட்
கிம்மியின் துணையும் அஞ்சேல், ஈண்டுனைத் தீண்டுகின்ற
கைம்முறை தடிந்து வல்லே விடுவிப்பன், காண்டி என்றான்.

13 தட்டறு நோன்மைபூண்ட ச்சிதனைத் தமியளென்றே
பட்டிமை நெறியாற் பற்றிப் படருதி, இவளை இன்னே
விட்டனை, போதி, செய்த வியன்பிழை பொறுப்பன், நின்னை
அட்டிடு கின்ற தில்லை, அஞ்சலை அரிவை என்றான்.

14 புந்தியில் இதனையுன்னிப் பொள்ளெனச் சினமீக் கொள்ள
இந்திரன் தொழுவன் கொல்லா மெனையிடை தடுக்கு நீரால்
சிந்துவன், இவளை, யென்னாச் செங்கையில் சூலந்தன்னை
உந்தினள், அதுபோய் வீரன் உரன் எதிர் குறுக்கிற் றன்றே.

15 சூளின்ஆர்த் தெறியும் வீரன் சுடர்கொண்முத் தலைவேல் தன்னை
வாளினால் தடிதலோடு மறிமுகத் தணங்குசீறிக்
கேளினால் தனது பாங்கில் கிடைத்ததுன் முகிகைச் சூலம்
சோரினால் சுடிதவாங்கிக் கூற்றறும் உட்க ஆர்த்தான்.

16 வீரமாகாள, கேண்மோ, வேதனே யாதிவிண்ணோர்
ஆரும்வந் தாசி கூற அகிலமும் ஆளுகின்ற
சூரனும், எமதுமுன்னோன் தோளிடை யுய்ப்பக்கொண்டு
பேருவன், இவளை, ஓராய், விலக்கினை, பேதை நீராய்.

17 (போதலும்) அதனை ஐயன் பொருநரில் தலைவன் பாரா
எருதிபோலும், நில், என் றெய்தியே உடைவாள் வாங்கிச்

சேகுறு மனத்தாள் கூந்தல் செங்கையால் பற்றி ஈர்த்துத்
தோகையைத் தொட்டகையைத் துணித்தனன், விண்ணோர்துள்ள.

18 அயமுகிவீழ்தலோடும் அழுங்கியே அயலில்நின்ற
வயமிகு துன்முகத்து மங்கைதன் கரத்தி லொன்றைச்
செயிராறு சசியை நீயும் தீண்டினைபோலும், என்னாத்
துயல்வரு தொடையல் வீரன் துணித்தனன் சோரிபொங்க.

19 *வீவதே இனியெனும் வினையினேன் தனக்கு
ஆவதோ இஃதெனும், ஐயகோ வெனும்
மேவரும் புகழ்தரும் எங்கள் அண்ணர்பால்
போவதெவ் வாறெனப் புலம்பு கொள்ளுமே.

20 மறைத லுற்றிடும் இந்திரன் தன்னைஇவ் வனத்தில்
உறைத லுற்றிடும் உன்தனை ஒழிந்தவா னவரை
இறைதனில் பற்றியீர்த்துப் போயென் நகர்தன்னில்
சிறைபடுத்துவன், திண்ணம், எம்கோமகன் செயலால்.

21 உங்கள் தம்மை யான்சிறை படுத்தே னெனின் உலகம்
எங்கும் ஆள்கின்ற சூரபன் மாவெனும் இறைவன்
தங்கையன்றி, யான் என தூரந்தனி லெழுந்தனவும்
கொங்கையன்றி, யான் பேடியே, குறிக்கொள், என் றகன்றாள்.

22 மறிமுக முடைய தீயாள், மன்றினுக் கணிய ளாகிக்
கிறிசெயு மன்னைதன்னைக் கேளிரை மருகா னோரைத்
திறலுடை முன்னையோரைச் சிந்தையி லுன்னி யாண்டைப்
பொறிமகள் இரியல்போகக் கதறியே புலம்ப லுற்றாள்.

23 தாதையானவரளித்த மைந்தர்களே விருப்புறுவர், தாயர் பெற்ற
மாதரார் பால் உவகை செய்திடுவர், ஈதுலக வழக்க மென்பர்,
ஆதலால் என்துயரம் அகற்ற வந்தாயிலை, அந்தோ, ஆருமின்றி
ஏதிலார் போல் தமியேன் கரமிழந்தும் இவ்வுயிர்கொண் டிருப்பதே
[யோ

* சாவ

24 வருவீர் எங்ஙனு மென்றே அஞ்சாது
புலோமசையை வலிதே வெளவிப்
பெருவீரமுடன் வந்தேன், எனது கரதலம்
துணித்துப் பின்னே சென்று
ஒரு வீர மாகாளன் அவளையுமீட் டேகினன்,
அப்போதும்பர்க் கானில்
ஒருவீருஞ் செல்லீரோ, நமரங்காள்,
நீருமவர்க் கொளித்திட் டீரோ.

25 மேயினன் பொன்னுலகில் மின்சுமந்து
பழிக்கஞ்சி வெருவிக் கானுன்,
போயினன், போயினன் வலியலன், என்
றுரைத்திடு வீர் போலும், அன்னான்
ஏயினன் ஒருவனையே யவன் போந்து என்கரமு
துணித்தான், இல்லக் கூறைத்
தீயினர் கரந்த திறனுயிற்றே,
இந்திரன் தன்செயலு மாதோ.

26 என்னூற்ற நண்டுகளின் துணையாகுஞ்
சிறுமைத்தே எனினும், யார்க்கும்
உன்னூற்ற பகையுண்டேல் கேடுளது,
என்றுரைப்பர், அஃதுண்மை யாமால்,
தன்னூற்றம் தன்னூற்றம் வெல்புரிந்
தழல் குலிசத் தடக்கை அண்ணல்
கன்னூற்று மறைந்திருந்தே எனது கரம்
துணிப்பித்தான், காண்மின், காண்மின்.

27 ஒன்னார்தம் சூழ்ச்சியினல் ஒரு முனிவன்
என்சிறுவர் உயிர்கொண்டு ற்ருர்
இந்நாளில் அஃதன்றி ஒருவனைக் கொண்
டெனது கையும் இழப்பித்தாரே.
பின்னாளில் வருத்தமுற நன்றாசு புரிந்தனையால்
பிழையீ தன்றே.

மன்னவோ, மன்னவோ யான்பட்ட
இழிவரவை மதிக்கி லாயோ.

28 காவல்புரிந் துலகாளும் அண்ணவோ
அண்ணவோ, கரம் அற்றேன் காண்
ஏவரெனக் குறவாவர் ஊனமுற்றோர்
இருப்பதுவும் இழுக்கே யன்றோ,
ஆவிதனை விடுவேன், அதற்கு முனம்
என்மானம் அடுவ தையோ.
பாவியொரு பெண்பிறந்த பயனிதுவோ,
விதிக்கு என்பால் பகைமற் றுண்டோ.

29 ஒலிகெழும் உவரிப் புத்தேள் உள்ளுறை வடவைச் செந் தீத்
தொலைவுழி எழுவ தேபோல் சூரனுட் சினமிக் கொள்ள
மலிகதிர் இருள்புக் கென்ன வாளுரீ மருங்கே தானைத்
தலைவர்நின் றுரையேவித் தனித்தனி தண்டஞ் செய்வான்.

30 சிற்சிலர் தமது நாவைச் செக்கையைச் சேதித் திட்டான்
சிற்சிலர் துண்டம்தன்னைச் செவிகளைக் களைதல்செய்தான்
சிற்சிலர் மருமம் தன்னைச் சிறுபுறத் தொடுகொய் வித்தான்
சிற்சிலர் தாளைத் தோளைச் சென்னியைச் சேதிப் பித்தான்.

---

## கூறு IX.

### பானுகோபன் படையெடுப்பு

தந்தையிடம் விடைபெற்றுச் சென்ற பானுகோபன் துன்முகியைக்கண்டு 'உன்கை யறுபட்டவிடம் யாது' என, அவள் சீர்காழிச் சோலையைக் காட்டினள். நால்வகைச் சேனையுடன் பானுகோபன் அவண் சென்று சோலை முழுதுந் துருவிப்பார்க்க இந்திரனாயினும் இந்திராணியாயினும் மாகாளனாயினுங் காணாமற்போக அச்சோலையை அழித்தனன். பின் விண்ணுலகம் போய்த் தேவர்களை வருத்தி வினவினன். இந்திரன் மகன் சயந்தன் தன் தந்தை, தாய், தமர் இல்லாத நிலைமையை யுன்னிப் பன்முறையிரங்கி, 'வருவன வாரா தொழியா. அவுணர்களுக்குப் புறங்காட்டுவதில்லை. எதிர்ந்து சாவேன், அவுணர்களைக் களைந்து பிழைப்பேன், இது தவிர வேறுவழியில்லை' என்று கருதிப் போர்க்கோலம் பூண்டனன். தேவர்களுந் துணிந்தனர். ஐராவதத்தின் பிடர்மேலேறிக்கொண்டு அமரர்சூழச் சயந்தன் பானுகோபனிடமடைந்தான். போர் நிகழ்ந்தது. தேவர்கள் வலியற்றுராய்ப் போர்க்களம் விட்டோடினர்கள். நீலகேசன் சரமாரி பொழிந்தான். மாயைவலியால் சயந்தன் அவுண வெள்ளங்களை அழிக்கத்தலைப்பட்டனன். அவுணர் சேனையும் பயந்தது. சேனைத் தலைவர்களாகிய சோமாசுரன், மாயாவலி, சுரகேசரி, பதுமன், மாருதபலி, தண்டகன், வாமன், மதிவருணன், மாகதன் முதலானவர் மெலிவடைந்தனர். உடனே பானுகோபன் சுக்கிரகுரு போதித்த மந்திரத்தை மனத்திற் கொள்ள சயந்தன் அதனையறிந்து மனங்கலங்கினன். போர் தொடங்கி

ஞன். போரில் பானுகோபன் சயந்தனையும் யானையையும் வருத்தினன். வெள்ளையானைக்குக் கோபமிகுந்து பானுகோபன்மார்பிற் ருக்க அவனுந் தன்கையா லதனை வருத்த அது அயர்ந்து விழுந்தது. சயந்தன் மெய்சலித்து வுணர்வுகெட்டுத் தனியனாய் வீழ்ந்து கிடந்ததை அவுணர் கண்டு பானுகோபனுக் குரைக்க, அவன் 'இவனை மற்றத் தேவர்களைப் போன்று சிறையிலிடுக' என்று பணித்தனன். பின்னர், சிறையிலில்லாத தேவர்களையும் பொன்னகரத்தையும் இருந்த விடந்தெரியாமல் அதனைச்சுட்டுக் கரியாக்கி விடுக என்று கட்டளையிட்டனன். எம்பெருமான் திரிபுர மெரித்தாற் போன்று பொன்னகரைச் செந்தழலுக்கு இரையாக்கினர். சயந்தனையுஞ் சிறையிடப்பட்ட சுரர்களையும் மகேந்திர புரத்திற்குக் கொண்டுபோய் சூரபதுமனிடங்காட்ட, அவன் மகனைத்தழுவி முத்தமிட்டு, இச்சிறைகளை வதையுங்கள் என்று ஏவ, சயந்தனாதியர்கள் துயரக்கடலி லாழ்ந்தனர். வெள்ளையானை பூவுலகில் திருவெண்கா டடைந்து எம்பெருமானை வழிபட்டு அன்பின் பயனாக போரிலிழந்த நாற்கோடுகளும் முன்போல் வளரப்பெற்றது.

1 நிரைத்தெழு தானவர் நீத்த மாயிரம்
பரித்தொகை யன்னதே பாதிதேர் கரி
உரைத்த அத்தானையோ டொல்லை ஏகினன்
திருத்தகும் இரவியைச் சிறையில் வீட்டினன்.

2 எந்தையாகும் சுரவனிலை, இமையோர் குழுவில் பலரில்லை,
தந்தையெம்மோ டிங்கில்லை, தமியேன் நம்மோடிருந்தேனல்
அந்த அசுரன் சென்றமையும் அல்லல் புரியுந் திறம்போலும்
முந்தை விதியை அறிவேனோ என்னோ இன்று முடிந்திடுமே.

3 தாயும் பயந்த தொல்லோனும் தமராகுற்ற அமரர்களும்
பாயும் கடல்சூழ் நிலவரைப்பில் காந்தார் அதனைப் பல்லவுணர்

ஆயும் படியே திரிந்தனரால் அற்றும் எல்லை யளியேமும்
போயெங் குறைவோம் நமையெல்லாம் போற்றும்படிக்கோர் புக
லுண்டோ.

4 போவதில்லை யாண்டு மினிப் புலம்புமாறும் இல்லை, அதின்
ஆவதில்லை, வருவதெல்லாம் அடையும், அன்றி, அகலுவதோ
வீவதில்லை யவர்க்கு வெரி நிறைஞ்சிப் புகழ்வதிலை எதிர்ந்து
சாவதல்லால் உய்ந்திடுதல் இரண்டே உறுதி தமியேற்கே.

5 இடுக்கணுறு தேவர்தமை ஈர்த்தனர் கொடு ஏகி
மிடற்கதி ரருக்கனை வெகுண்டவன்முன் னுய்ப்பத்
தடக்கரிய வன்மையொடு காவல் கொளும் என்றான்
தடக்களிறு மேல்வரு சயந்தனிவை கண்டான்

6 அந்தரந் தனில் இரவியைச் செயிர்த்திடும் அவுணன்
இந்திரன் மகன் மாயை கொல், இதுவென எண்ணா
முந்தை நாள் புகர் உதவிய மூலமா ஞான
மந்திரந்தனை யுளந்தனில் விதிமுறை மதித்தான்,

7 வெய்ய வற்சிறை யிட்டவன் விட்டகோல்
வைசய மொத்த சயந்தன் மெய்ம் மூழ்கலும்
மைய லுற்றனன், மற்றொரு வெஞ்சமர்
செய்வ தற்குத் தெளிதவின் றாயினான்.

8 மாயை போயது தனித்தனங் குறைந்தது வன்மை,
தீயர் பற்றவ, ரழியும் இந் நகரெனச் சிறிது
நீ இரங்கலை, இனிமனனே, விதிநெறி காண்
ஆயின் இங்கிவை என்றனன் சயந்தனும் அறிஞன்.

9 வரிவில் வாங்கியே யான்விடும் சரம்பட மயங்கிப்
பெரிது மெய்தளர் வற்றனன், பேசவுங் கில்லான்,
கருத வானென இவன்தனை வருத்தவிர், கடிதே
சார்குழாத் தொடு புரிமினோ சிறையெனச் சொற்றான்.

10 தொழிலிது புரிந்தகாலைச் சூர்மகன் தனது மாடே
தழியகா வலரைநோக்கிச் சயந்தனும் இவரு மல்லால்
ஒழியநின் றோரை யெல்லாம் ஒல்லையில் தருதிர், பின்னர்
அழியஇம் மூதூர் செந்தீ யரசனுக் களித்திர் என்றான்.

11 காடு போந்தனன் இந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது, சயந்தனும் சிறையிடைப் பட்டான்,
நாடில் விண்பதச் செய்கைஇது, எம்பிரான் நல்கும்
வீடதே யலால் துன்பறும் ஆக்கம் வேறுண்டோ.

12 வியந்தரு கதிரைமுன் வெகுண்டுளா னொடு
சயந்தன்விண் ணுலகிடை சமர்செய் தெய்த்துழி
வயந்தரு கோடுகண் மாய்ந்து தந்நிவீழ்ந்
தயர்ந்தது புவியிடை யணுக்கிற் றத்துணை.

13 அறிவுள மால்கரி அமலன் தந்திர
முறையது நாடியே முதிரும் அன்பினால்
மறையுற வழிபடீஇ வைகும் எல்லையில்
குறைபடு நாற்பெருங் கோடும் வந்தவே.

---

## கூறு X.

## இந்திரன் வரம்பெறுதல்.

பொன்னுலகந் தீக்கிரையானதையும் வீரப்புதல்வனும் சுரர்களும் பட்ட துயரையும் அறிந்து பேருமலையினின்று கைலைக்குச்சென்று முழுமுதலாகிய எம்பெருமான் தாள் பணிந்து நின்ற இந்திரன்மீது கருணைகூர்ந்து 'வேண்டுவது யாது' என்று இறைவன் வினவ சூரபதுமன் தன் கிளையோ டழிய வரந்தரல்வேண்டும்' 'என்று விண்ணப்பித்தனன். அன்றியும்'' 'சூரபதுமன் ஆணையென்னில் எவ்வுயிர்களும் நடுங்கும். ஆகியே, உம்மிடம் அவனழியாத வரம் பெற்று ளான். அவனுக்குப் பிரமா நாடொறும் பஞ்சாங்கஞ் சொல்லி யுழல்வர். திருமால் அவனொடு பொருது தோற்றார். ஆத லால் அவனுக்கிணையாவர் எவருமிலர். அருளியவரத்திற்கு மாறாக எதனையுஞ் செய்தலியலாது. ஆராய்ந்து எங் கள் துயரைத் தீர்த்தல் உமது அறக்கருணையாம்' என்று சொல்லி இறைஞ்சினன். பரிவுற்ற ஆதி, "யாம் உமா தேவியை வதுவைசெய்து ஒரு குமரனைத்தருவோம். அவனால் உங்கள் துன்பமனைத்தும் ஒழியும்" என்று அருளி மறைந்த னர். அதன்பின்னர் இந்திராதிபர், குமரக்கடவுளையணுகி, வியாழகுருவை வணங்கி, அவர் மூலமாகத் தங்கள் குறைகளை யுந் தங்களுக்கு நேர்ந்த இடர்களையும் விவரமாகக் கூறித் தங்களைக் காப்பாற்றுதல் கடனென்று அடியில் வீழ்ந்தனர். வியாழகுரு எழுந்து' 'தேவரீர் ஒருவரே சூரபதுமனை வெல்ல வுங் கொல்லவுங் கூடும். அவனைக் கொன்று சயந்தனுதிய வசுரரைச் சிறையினின்று மீட்டித்தரல்வேண்டும்' என்று

பணிந்து கூற, குமரவேள் 'உன் சொல்லிற் பிழையிராது. கவலற்க' எனவருளி, பக்கலில் நின்ற இந்திரனை நோக்கி, 'நீ மனத்தி லேது மெண்ணற்க. சூரபதுமன் கிளையோடு அழியவும், அசுரர் சிறையகலவும், பொன்னுலகத்தை நீ மீண்டு பெற்றுளவுஞ் செய்குவம். ஐயுறற்க' என்றருளினர்.

" ஈண்டிது கேள், மனத்தேதும் எண்ணலை,
மூண்டிடு சூர்குல முடிய, வானுளோர்
மீண்டிடல் இருஞ்சிறை, விண்பதத்தை நீ
ஆண்டிட நல்குதும், ஐயுறேல், என்றான்."

திருவாய் மலர்ந்தருளியதைச் செவியிலேற்ற இந்திராதியர்கள் 'நந் துன்பந் தொலைந்தது' என்றுகூறி இன்பக்கடலிற் றிளைத்தனர்.

---

## கூறு XI.

### வீரவாகு தூது.

வீரவாகு என்பவர் குமரவேளின் தானைத்தலைவரி லொருவர். அவர் அன்பும் அறிவும், ஆபந்த சொல்வன்மை யும், அழகிய வுருவும், கல்வியும், அஞ்சா வீரமும், காலமு மிடனுமறிந்து கடமை செலுத்துந்தன்மையும், துணிவுந்தூய் மையும் பொருந்தியவர். பல சிறந்த குணங்களும் அமைந்த வீரவாகு தேவரே சூரபதுமனிடந் தூது செல்லத்தக்கவ ரென்று பிரமர் சொல்ல அவர் 'நன்று' என்றனர். குமரவேள் விடுத்த தூதாவது 'நீ சூரபதுமனிடஞ் சென்று சுரர்களை விடுத்துச் சுகமேவாழலாம். இலையெனில் யாமே வந்து அசுரரைக் கொன்று உன்கிளையறுத்திடுவேம்' என்ப தாம். வீரவாகு தேவர் கடல்மீது பாய்ந்து யாளிமுகனாற் காக்கப்பட்ட இலங்கையை யணுகிச்செல்ல, அது யாளிமுகன் சூரபதுமனிடம்போனதால் அவன்மகன் அதிவீரன் காவலில் இருந்தது. அவன் தானைத்தலைவனாகிய வீரசிங்கன் வீரவாகு தேவரைச் சந்தித்தான். வேடர்கள் சிங்கத்தைச் சுற்றிப் பொருவதுபோல அவுணப்படைகள் வீரவாகு தேவரைச் சூழ்ந்தன. நூறுவெள்ளஞ் சேனைகள் மாய்ந்தன. சூலப் படை வாட்படையைத் துணித்தது. வீரசிங்கன் தொலைந்து போயினன்; வீரவாகு இலங்கையிலுள்ள முச்சிகரங்களுள் நடுச்சிகரத்தின்மேற் பாய்ந்தனன். இடியேறுண்ட பாம்பு போல அவுணப்படைகள் கலங்கியோடின. இலங்கை கடலி லாழ்ந்தது. அதன் காவலனாகிய அதிவீரன் அவருக்கு எதிர் சென்றான். போர் நிகழ்ந்தது. சமயம் பார்த்து வீர

வாகு அதிவீரனுடைய உறுப்புக்களை ஒருங்கே வெட்டி வீழ்த்தினர். அவனைக் கொன்றபின் மகேந்திரம் நோக்கி ஆயிரம் யோசனை செல்ல, அந்நகரின் மதிலுங் கோபுரங் களுந் தோன்றின. ஒவ்வொரு வாயிலையும் சேனைவெள்ளங் காத்து வந்தது. அவற்றைக்கண்ட வீரவாகுதேவர் அதி சயித்து 'எம்பெருமானன்றிச் சூரபதுமனை வேறியார் சங்கரிப்பார்? யான் போர்செய்தல் முறையாகாது' என்று பலவாறு எண்ணித் தெளிந்து வடக்குவாயிலை விட்டுக் கீழவாயிலுக்குச் சென்று அங்கும் அவுணர் காவல் மிகு ந்திருந்ததை யுற்றுநோக்கித் தெற்குவாயிலுக்குப் போயினர். அது கயமுகன் காவலி லிருந்தது. அவன் யமனுக்கு யமன் போன்றவன். அவன்வீரவாகுவைப்பார்த்து 'சீறுகின்ற சிங்கமிருக்கு முழஞ்சில் ஒரெளிய மான்பிணை ஆராயப்புகுமோ?' என்று நினைத்தான். வீரவாகுவைக் கண்டு 'நீ ஒற்றுவனாய் வந்தாய்போலும், உன்னை யனுப்பினவர் யார்? நீ இந்திரனுடைய ஆளா? நில், எங்கே போவாய்' எனக் கய முகன் கூறினன். வீரவாகு இக் கயமுகனைக் கொன்றபின் போர்செய்தல் புத்தியன்று, அணுவுருவெடுத்து மகேந்திர புரியினுட் புகுவேன் என்று உறுதி செய்தனர். அந்நகரத்தி னடுவே ஆகாயவழிச்சென்று பானுகோபனுடைய கோயிலைப் பார்த்துவிட்டு முறையே அக்கினிமுகன், இரணியன், வச் சிரவாகு, மூவாயிரவர் கோயில்களையுங்கடந்து, இந்திராதி யரின் சிறைக்களத்தைச் சேர்ந்து ஆங்கு சயந்தன் எம்பெரு மானையும் அவருடைய அற்புதச் செயல்களையும் நினைத்து, தமியேனுக்கு நேர்ந்த துன்பத்தை விரைவில் நீக்கி உம் முடைய திருவடியைத் தந்தருளும்' என்று பற்பலவற்றைச் சொல்லிப் புலம்பியதைக் கேட்டு, 'அறுமுகக் கடவுள் உங் கள் சிறையை நீக்கும் நாள் சிறிதுளது. அதுகாறு மிங்கிருப்

பீர். யான் குமரவேள் தூதன். எம்பெருமானுடைய திரு வார்த்தையைச் சூரபதுமனுக்குச் சொல்வேன். கேளானுயின் அவன் கிளையொடும் அற்றுப்போவான். திண்ணம், திண்ணம்' என்று சயந்தனைத்தேற்றினர். சயந்தனிருந்த சிறைக்களத்தை விட்டகன்று சூரபதுமனின் கோயிலைச் சூழ்ந்த அகழியைத் தாண்டிப் பல்லாயிர வீரர்களாற் காக்கப்பட்ட மதிலையும் கோபுரத்தையுங்கண்டு நீங்கி அத்தாணிமண்டபத்தை யடைந்து சூரபதுமன் அரசிருக்கையைக் கண்ணுற்று 'சூரபதுமனைப் போன்று உயிரை விட்டுத் தவஞ்செய்தவ ரில்லை. எம்பெருமான் இவனுக்கு வரமீந்தது போலப் பிறர்க்கீந்ததில்லை கபடமில்லாத தூக்கணங்குருவிகள் சிறிய கொள்ளித்தீயை மின்மினிப்பூச்சியென்று கருதிக் கூட்டினுள் வைத்து அழிந்த கதைபோன்று இச்சூரபதுமன் பலவசுரர்களைச் சிறை வைத்த பாவத்தினுல் விரைவில் இறப்பான். இதற்கோ ரை யமில்லை' என்றகூறிப் பின்னர் சூரன் முன்சென்று 'குமர வேள் தூதுவன் யான்' என்று தெரிவித்து, அவனவையில் தனிச்சிங்காசனத்தில் வீற்றிருந்தார். இதனைக்கண்ட அவுண வீரர்கள் 'இவன் நம்மை மயக்கி இங்கே நடுவில் வந்தது எவ்வாறு ? இப்பெரிய சிங்காசனம் இவண்வந்தது எப்படி ? இவன் நம்மினும் மாயங்களையுடையவன் போலும்' என்று கிளந்தனர். சூரபதுமன் வீரவாகுதேவர் வீற்றிருந்ததைக் கண்டு 'நீ யார் ? சொல்லுதி' என்றனன். அதற்கு வீரவாகு 'திருச்செந்திலம்பதியி லுறையும் குமரவேளுக்கு அடியேன் யான். அவருடைய கணக்கற்ற வீரர்களிலொருவன் யான். பகைவர் புகழும் வீரவாகு என்பது என்பெயர். தாரகனை இமைப்பொழுதிற் கொன்ற குமரனுடைய தூதுவன் யான். நீ இந்திரனை இந்திராணியோடு துரத்திப் பொன்னுலகத்தைக் கொளுத்தி, சயந்தனுதியரைச் சிறைப்படுத்தித் துயர்

செய்ததை யொறுக்குமாறு குமரவேள் செந்திலம்பதிக்கு வந்தனர். நீதியோடு உலகத்தைப் பாதுகாப்பதே அரசநெறி. சலந்தரன், அந்தகன், முப்புரத் தசுரர் தேவர்களை வருத்தி னமையால் விரைவி லழிந்தனர். பிறர்க்குத் துன்பஞ் செய் வோர் இம்மையிற் செல்வமிழந்து மறுமையில் நெடுங்காலம் நரகத்திலழுந்துவர். உன் கொடும் பாவச்செயலால் உன்னு யிருக்கு இறுதிவரும். தேவர்களை இப்பொழுதே சிறையி னின்று விட்டுவிடுதல் உய்யும் வழியாம். மறுத்தியாயின் நீ உயிரிழத்த லுறுதி' என்று விரித்து வகுத்துரைத்தனர் இவ்வுரைகளைக் கேட்டு நகைத்துச் சூரபதுமன் சொற்ற னன். "தேவர்கள் அவுணர்குலத்தை வருத்தி அவர்களு க்கு வறுமையைச் செய்தனர். ஆதலால் பதிலுக்குப்பதில் யாம் செய்துளேம். அன்னார் ஒழுக்கத்தையுங் கெடுத் தேம். சிறையிலும் வைத்தேம். எம்முன்னோர் செய்த முறைமையே யாமுஞ்செய்தேம். தேவர்களைச்சிறையினின்று விடேம். எந்தம்பியாகிய தாரகனைக் கொன்ற பாலகன் மீது போருக்குவர எண்ணினேம். பாலகனோடு போர்புரிதல் தகைமையன்று என்றனர் நண்பர்சிலர். எம்பெருமான் கண்ணினுதித்த சிறுவனே எம்மெதிர் நிற்பான். பேதாய் ; நல்ல ஒற்றன்நீ. பிழைத்துப் போதி' என்றனன். வீரவாகு தேவர் சினத்தீயெழ இவற்றைச்சொல்வார் "உய்யுமுறையை யுணராது உழலுங் கீழ்மகனே கேள். நீ குமரவேள் பெரு மையை அறிந்திலே. பாலனென்று இழிவுரை செய்தாய், உயிர்க்குயிராய் நிற்கும் எம்பெருமானே அப்பாலகர், அதனை அறிதி. தினையினுஞ் சிறியர்போல்வர் பெரியராவர். அவரன்றி யோரணுவு மசையாது. அவராற்றலைக் கடந்தவரிலே. அவ ரைப்பாலனென்றிகழ்ந்தாய். கணப்பொழுதில் உன்னுயிரை வாங்குவோம் ; நீயுமுன்கிளையும் உய்யவிரும்பிரேல் சுரர் களைச் சிறையினின்று விடுக்குதி ; போரைத் தவிருதி ; குமர

வேள் தானே தஞ்சமென்று கருதி' என்பதாம். அவற்றைக் கேட்டுச் சினந்த சூரபதுமன், 'நீ சிறு பாலகன் தூதுவ னென்று உன்னுயிரை எடாதிருக்கின்றேம். உன் வீரத் தைச் சொற்றாய். இறுமாப்பான சொற்களைச் சொன்னாய்.' என்றுபுகன்று தம் வீரர்களைப்பார்த்து 'தூதுவனைக் கொல் லுதல் பழி; இவனை இறைப்பொழுதிற் சிறையிடுதிர்' என் றான். வீரர்கள் பிடிக்கமுயன்றனர். வீரவாகு தேவர் அவர் களைப் பிடித்து அடித்து ஒடித்து சூரபதுமன் முன்னெ றிந்துவிட்டு 'எம்பெருமானுடைய வேற்படை இனியுன்னைத் தொலைத்துவிடும். யாம் போவேம்' என்று கூறி அவைக் களத்தைவிட்டேகினர். சூரபதுமன் சதமுகனை நோக்கி: 'இவனைக் கொல்லுதல் தருமநெறியன்று, இவன் வலியைக் கெடுத்துப் பிடித்துவா' வென்று பணித்தனன். சதமுகன் இருப்புலக்கை, சூலம், வேல் முதலாகிய படைக்கலங்களை அவர் மீது விடுக்க, வீரவாகு அவனைத்தாக்கி வீழ்த்திக் காலால் தலையையுருட்டி 'சூரபதுமன் அவைக்களத்தை யழித்துப் பின்னர் அவன் நகரையு மழிப்பேம்' என்று கரு தினர். பின்னர் தம் பெரிய வுருவத்தையுந் தோற்றுவித்தனர். அதனைக்கண்ட பலரும் கையையுதறி அச்சுற்று ஓடினர். நகரைக் காவல் செய்த ஐம்பது வெள்ளம் அவுணர்கள் அவரை நெருங்கி எழு, தோமரம், பிண்டி, பாலம், தண்ட மாதிப் படைக்கலங்களை வீசி ஆரவாரிக்க அவர் அவுண வீரர் களை மிதித்தும் கோதித்தும், நசுக்கியும், புதைத்தும், தகர்த் தும், துவைத்தும், உருட்டியும், புரட்டியும், தலையை நெரித் தும், புயத்தை யொடித்தும், கையைமுரித்தும், கழுத்தைத் திருகியும் அழித்தனர். மகேந்திரபுரம் அழிந்தது. அப்பொ ழுது சகத்திரவாகுகள் வீரவாகுவை எதிர்க்க அவர் மரா மரத்தினல் அங்கங்கள் சிதையும்படி யடித்துக்கொன்றனர். சூரபதுமனுடைய இளையமகன் வீரவாகுவைப் போருக்

கழைக்க, அவர் போருக்கு முன் சென்று 'வளைந்தது வில்லு, விளைந்தது பூசல்' 'அழிந்தது அவுணர் குலம், என்று சொல்லி, அவுணச் சேனைகளையழிக்க, வச்சிர வாகு ஆயிரம் பாணங்களைப் பூட்டிவிட அவையனைத் தையும் கையாற் பிசைந்து துகளாக்கினர். பின்னர் அவனையுங்கொன்ருர். அதன்பின் வீதிகளிற் சென்று எவரு மஞ்ச அவற்றைக்கடந்து முருகனைத்துதித்து இலங்கை மலையை அடைய, சூரபதுமனைக்கண்டு திரும்பிவந்து, வீர வாகு தேவர் மிகுந்த வேகத்தோடு செல்லுதலைக்கண்ட யாளி முகன் 'இவன் யார்? கள்வனே?' என்ன, உன்மகனை இன்று காலையில் மாய்த்த வீரன், மறத்தூதுவன் என்று அவுணர் சொற்றனர். உடனே கோபங்கொண்டு, யாளி முகன் 'இக்கொலைஞனைக் கொல்வேன், இக்கள்வனை வதைப் பேன்' என்று ஆரவாரித்தான். வீரவாகுதேவர் 'உன்னுயிரம் யாளிமுகங்களையும் அறுத்து வீழ்த்தி நாய்கட்கு இரையா க்குவேன். உறுதி, உறுதி' என்றனர். கடும்போர் நிகழ்ந்தது. வீரவாகுதேவர் அவன் ஆயிரங்கைகளையுஞ் சிரங்களையும் வெட்டி அறுத்து வீழ்த்தினர். யாளிமுகன் வீழ்ந்தபின்னர் செந்திற்பதிக்குப் போயினர். பூதப்படைத் தலைவர்கள் அவருக்கு மனமுவந்த வந்தனமளித்து அவரைத்தழுவினர். வீரவாகு தேவர், 'இழிஞர்களாகிய அவுணர்களுடைய ஊரு க்குச் சென்றதனுல் வந்த பாவம் யான் உங்களைக் கண்ணுற்ற தும் நீங்கப்பெற்றேன்' என்று அன்பார்ந்த முகமனியம்பிக் குமரவேள் கோயிலையடைந்தனர். அப்பொழுது குமரவேள், 'வீரவாகுவே, நீ சூரபதுமனிடந் தூதுரைத்தது முதலாக இவண்மீண்டுவந்தது இறுதியாக நிகழ்ந்தனவற்றை முறை யாகக் கூறுவாய்' என்றுகட்டளையிட்டனர். வீரவாகுதேவர் 'தேவர்களுடைய சிறையை விடுகிலேன்' என்று சூரபதுமன் கூற, அடியேன் அவ்விடத்தை விட்டு நீங்கி விரைவில் வந்

தேன். இதுவே நிகழ்ந்தது' என்று சுருக்கிச்சொல்ல, 'வீரச் செயல்களைக் கூறினையில்லை' என, வீரவாகுதேவர் 'அடியேனைத் தடுத்தவர்களைத் திருவலியினுற் கொலைசெய்து வந்தேன்' என்று விண்ணப்பித்தனர். குமரவேள் தேவர்களைப் பார்த்து, 'தேவர்கள் சிறையை விடோம் என்று சூரபதுமன் சொல்லிவிட்டபடியால், யாம் நாளையன்று அவனோடு போர் புரிவேம்' என்றருள, தேவர்கள் தங்களுடைய துன்பம் நீங்கியதென்று மகிழ்ந்தனர். சயந்தனைக்கண்ட மாற்றத்தை வீரவாகுதேவர் கூறி இந்திரன் மனத்தைத் தேற்றினர்.

1 மெல்லென உலவைக்கோனும் வீரமா மகேந்திரத்தில்
செல்லரிது எனக்கு, மற்றே செய்பணி நெறியாலன்றி
ஒல்லையில் அங்கண் ஏகி ஒன்னலர்க் கடந்துமீள
வல்லவன் இளையவீர வாகுவே யாகுமென்றான்.

2 சதுர்முகன் இனையவாற்றால் சண்முகனுளத்திற் கேற்பக்
கதுமென வுரைத்தலோடுங் கருணைசெய் தழகிதென்று
மதுமலர்த் தொடையல்வீர வாகுவின் வதனநோக்கி
முதிர்தரு முவகைதன்னால் இத்திறம் மொழிய லுற்றான்.

3 மயேந்திர மூதூரேகி வல்லை நீ அமலன் நல்கும்
சயேந்திர ஞாலத்தேரோன் தனையடுத்தொரு காற்றந்த
சயேந்திரன் மதலைவானோர் காப்பைவிட் டறத்தாறுன்னி
நயேந்திர வளத்தினோடு முறைகென நவிறி யன்றே.

4 அம்மொழி மறுத்தானேல் அவுண நின்கிளையை எல்லாம்
இம்மென முடித்து நின்னை எஃகவேற் கிறையா நல்கத்
தெம்முனை கொண்டு நாளைச் செல்லுதும் யாமே, யீது
மெய்ம்மைய தென்று கூறி மீள்கென, வீரன் சொல்வான்.

5 வெஞ்திறல் அவுணர் ஈண்டும் வீரமா மகேந்திரத்தில்
சுந்தரத் திருவில் வைகும் சூரபன் மாவின் முன்போய்

எங்தை நீ அருளிற்றெல்லாம் இசைத் தவன் உள்ளம் நாடி
வந்திடு கின்றேன் என்று வணங்கியே தொழுது போனான்.

5 கூர்ந்திடு குலிசத் தண்ணல் குமரவேள் ஒற்றன் தன்பின்
பேர்ந்தனன் சென்று வீரபெருந்திறற் சூரன் மூதூர்
சார்ந்தனே,சிறையில் வானோர் சயந்தனேடிருந்தார் அங்கண்
சேர்ந்தனே,தேற்றிப் பின்னும் செயலினை முடித்தி, என்றான்.

---

## கூறு XII.

### சயந்தன் கண்டகனு

தானும் இந்திராதியரும் படுந்துயரத்தை நினைத்து வருந்தி சயந்தன் எம்பெருமானைப் பின்வருமாறு வணங்கினன்.

1 வந்திப்பவர் பவங்கள் மாற்றுவோ, யெத்தேவர்
சிந்தைக்கு மெட்டாச் சிவனே, செழுஞ்சுடரே,
இந்தப் பிறவி யிடருழப்பச் செய்தனையோ,
வந்தித்த நின்புணர்ப்பை யாரே கடந்தாரே.

2 கைந்நாகத் துக்குங் கயவாய்க்கு நாரைக்கும்
பைந்நாகத் திக்கும் படருஞ் சிலந்திக்கும்
பின்னாகிய வுயிர்க்கும் பேருண்முன் செய்தனையால்
என்னு யகனே யெமக்கே னருளாயே.

3 ஒன்று யிருதிறமா யோரைந்தா னயைந்தாய்
அன்று தியின்மீட்டு மைந்தாய் அளப்பிலவாய்
நின்றாய் சிவனே யிந் நீர்மையெலாந் தீங்ககற்றி
நன்றுவி கட்குநலம் புரிதற்கே யன்றோ.

4 பொன்மலியுங் கொன்றைப் புரிசடையாய் இவ்வழிசேர்
துன்ப மகற்றித் துறக்கத்துட் டாழாது
பின்பு னனிநோற்றுப் பெறற்கரிதா நின்னடிக்கீழ்
இன்ப மொருதலையா யெய்தவருளா யெனக்கே.

இவ்வாறு சயந்தன் மனமாழ்கி யிருந்ததை யறிந்த எம்பெருமான் துயிலுற்ற சயந்தனுக்குக் காட்சி கொடுத்துத் தேற்றிய மொழிகளாவன:

"நாம் பரமசிவன் மதலே. உன்னல்லலும் மையலுமறிந்தே எழுந்தருளினேம். இந்திரன் எம்மை வணங்கினன். யாம் எண்ணிறந்த வீரர்களுடன் கிரவுஞ்சமலையையும் தாரகனை யும் வேலாற் களேந்தோம். பின்னர் செந்திற்படைவீட்டிலெ ழுந்தருளி உன்தந்தை தேவர்களுடன் வீற்றிருக்கின்றேம். உன் தாய் மேருமலேயி லிருக்கின்ருள். யாம் வீரவாகுவைத் தூது விடுத்துச் சூரபதுமன் மக்களிலொருவனைக் கொல் வித்தோம். பல அவுணர்களைத் தொலேத்தோம்: மகேந்திரத் தைப் பாழாக்கினேம்: பத்துநாளில் சூரபதுமனையும் மக்களே யும் அவுணப்படைகளேயும் அழிப்போம். உன்னுடன் தேவர் கள் சிறைநீங்குவர்; உங்கள் பதியையுஞ் செல்வத்தையும் மீளத் தருவோம்; நீ வருந்தற்க; மனமயக்கமொழிகள் அன்றி யும், வீரவாகு உன்னையும் தேவர்களேயும் நேரிற்கண்டு இனிய மொழி புகலுவன்; நீ காணுவாய்" என்பதாம்.

1 தந்தை தன்குறை நுங்குறை யாவையும் நுவன்று
வந்து நம்தமை வேண்டலும் வரம்பில் சேனையொடும்
இந்த ஞாலத்தில் எய்தியே கிரவுஞ்ச மென்னும்
அந்த வெற்பையும் தாரகன் தன்னையும் அட்டாம்.

2 அனையவன் தனை அட்டபின் செந்திவந் தமர்ந்தாம்,
வனச மீமிசை யிருந்திடு பிரமனு மாலும்
உனது தாதையும் அமரரும் நம்வயின் உறைந்தார்
இனேயல் வாழி, கேள், நுங்கையு மேருவில் இருந்தாள்.

3 வீரவாகுவாம் தூதனையா மிவண் விடுத்தேம்
சூரன் மைந்தன் அங்கொருவனைப் பலரொடுந் தொலேயா
நேரிலாத இக்கடிநகர் அழித்துநீ ருக்கிப்
பாரில் மாலேயில் மீண்டிடப் புரிதும் இப்பகலின்.

4 செல்லும் இப்பகல் கழிந்தபின் நாளேயே செந்தி
மல்லலம் பதி நீங்கி இந்நகர்க்கு அயல் வைகிச்

சொல்லு மைந்திரு வைகலின் அவுணர்தம் தொகையும்
அல்ல லாற்றிய சூரனு முடிந்திட அடுதும்.

5 அட்ட பின்னரே நின்னை வானவருடன் அவுணன்
இட்ட வெஞ்சிறை நீக்கிநும் திருவெலாம் ஈதும்
விட்டிடும் இக்குனதாகுல மென்றனன், வினைதீர்ந்து
உட்டெளிந்தவர் போதத்தி னுணர்வுமாய் உறைவோன்.

6 இங்ஙகர் குறுக யாமேய தூதுவன்
நின்னையும் சுரரையும் நேர்ந்து கண்ணுறீஇ
தன்னயம் கூறியே நடப்ப உய்க்குதும்
அன்னதும் காண்கென அருளிப் போயினன்.

கனவிற்கண்டதையுங் கேட்டதையும் நனவில் ஞாபகப் படுத்த முயன்ற சயந்தன் "எந்தொல்லையைத் தொலைக்க எழுந்தருளியதை யாம் சொல்ல வல்லேம். யாங்கள் உம தடைக்கலம், எம்மைக்காத்தருள னும் கடமை" என்றனன். இக்காட்சியையும் கனவையும் ஒவ்வொரு தேவருங் கண்டனர். அன்னோர் சயந்தனைக் குறுகிக் கண்டகனவை விண்டனர். துயில் மயக்கந்தீர்ந்த பின்னர் சூரபதுமனழியுங் காலங் கிட்டிற்று போலுமென்று தேவர்கள் மகிழ்ந்தனர்.

---

## கூறு XIII.

### சூரபதுமன் பெருங்குழு.

சூரபதுமன் மகன் வச்சிரவாகு மாண்டதைக் கேள்வியுற்ற மனைவி பதுமகோமளை யென்பாளும் வேறுதுணைவியர்களும் சோகத்திலாழ்ந்ததைக் கண்ணுற்ற தந்தையாரும் துன்பக்கடலிலாழ்ந்தனர். அவருடைய அமைச்சர்களிலொருவனாகிய தருமகோபன் என்னுந் துன்மந்திரி "உலகமெல்லா மழியினும் உற்றுருறவினரழியினும் அரசர்கள் கலங்கலாகாது. இறக்கும் விதிவரின் வீரர்களைப் பெண்களும் வெல்வர். செய்யவேண்டியனவற்றை ஆராய்ந்து செய்தல் கடமை. அழுதல் தலைமைக் கேற்காது. இரங்கலை, இரங்கலை" என்று தேற்றினன். பிரமனை யழைத்து உறைபதியைச் செவ்வனே செய்யுமாறு பணிக்க, மதில்கள் மாடவீதிகள் சிகரங்கள் வேரங்கள் சோலைகள் மண்டபங்கள் வாவிகள் பொய்கைகளையும் மீட்டு மமைத்து சூரபதுமன் கோயிலும் முன்போல அழகு பெறச் செய்ததால் மகேந்திரபுரி விளக்கமுற்றது. பகன், மயூரன் முதலான ஒற்றுவர்கள் குமரவேள் தானைப்பலத்தையறிந்து வந்தனர். குமரவேள் படையெடுத்து வருவராதலால் அதற்கேற்ற வழிகளையும் வருவாய்களையும் நாடுதல் தகுதியென்றனர்.

சூரபதுமன் உடனே பெருங்குழுக்கூட்டி, தேவர்களைச் சிறையினின்று நீக்கும் பொருட்டுக் குமரவேள் படையெடுக்கப்போவதாக அறிகிறேன். நீங்கள் செய்யத்தகுவதைச் சொல்லுங்களென்று அமைச்சர்களைக் கேட்க, அவர்கள் ஒவ்வொருவராக தத்தமக்குத் தோன்றியவற்றைக் கூறினர்கள்.

மகிடன் முதலில் சொன்னதாவது: 'கிரவுஞ்சமலையையும் தாரகனையும் கொன்றவீரனைப் பாலனென்ன விகழ்தல்அறிவுடைமையாகுமோ. வச்சிரவாகுவைக் கொன்ற கள்வனைத் தூதுவனாகக் கொள்ளலாமோ. உம் தம்பியார் கொல்லப்பட்டவுடன் முருகவேளை வெல்வதற்கு ஏற்பாடுசெய்திருந்தால் இத்துன்பம் நம்மை யடையாது. உம்மகனிறந்ததும் இந்நகர மழிந்ததும் செய்வனவற்றைக் காலந்தாழ்க்காமல் செய்திருக்கவேண்டும். எரிசிறிதாயினும் ஊரை நீறுக்கும். கழிந்ததை நினைத்து நைதலழகன்று. முருகவேளை வளைத்துப் போர்செய்ய விரைகுதி; காலதாமதஞ் செய்யற்க."

மற்றொரு மந்திரியாகிய துர்க்குணன் இதனைக் கேட்டு கைகொட்டி நகைத்துச் சொல்வான்: 'அரசரேறே, நீர் திருமாலை வென்றிலர். உம் தம்பியர்கள் வெற்றி பெற்றனர். ஒரு பாலகன்மேல் போருக்குச்செல்லல் உமக்கு வீரமாகுமோ. பல வரங்களைப்பெற்ற நீர் பாலகனைப் பொருட்படுத்தலாமோ. உம்முடைய படைத்தலைவர்களையனுப்பி அன்னார் முருகவேளை வென்று வருதலை தகுதி."

தருமகோபன்: நீர் பாலகனோடு போர்புரிதல் பொன் கலப்பை கொண்டுப் புன்செய்யை உழுவதாகும். உம் வீரத்தைக் காணின் சிறுவன் புறங்கொடுப்பது உறுதி, தக்கார் தகவிலரையறிந்து கைகலக்கவேண்டும். நகத்தால் கிள்ளியெறியத் தகுவதை வாள்கொண்டு வெட்டுவரோ அறிஞர். சூழ்வலியால் தாரக னுயிரிழந்தான். வச்சிரவாகுவும் கொலையுண்டான். நீர் படைத்தலைவ னொருவனையழைத்துப் போருக்கு அனுப்புவீரானல் அவன் வெற்றிபெற்று வருவான். இதுவே மதி."

பின்னர் காலசித்து சிரித்துச் சொல்வான்! "செந்திற் பாலகன் போருக்குவரின் சிலரை அனுப்புதல் தகுதி. தேவர்கள் நம்குடி. திக்குப்பாலகர் எம் ஏவலாளர். என்னை அனுப்பும். யான் பாலகனைக் கொண்டுவருவன்."

சண்டன் அதனைக்கேட்டுச் சொல்லலுற்றான்: "அவுணருடைய மந்திரம் அழகு அழகு. தமியேனை அனுப்பும்; பூதரைக் கொன்று பாலகனை வென்று பிறரையுமழிப்பேன்.

அவனையடுத்த படைத்தலைவனாகிய அனலி கூறுவான்: "சிறுவன் போருக்குவரின் அவனை எதிர்க்காமல் மந்திரத்திற் கூடிப்பேசுவது சூரருக்கு அழகோ."

சிங்கன் உதட்டைக் கடித்துக்கொண்டு, "அரசே, பாலகனை வதைக்க வீரர்கள், சேனைத்தலைவர்கள், அமைச்சர்கள், கூடி சூழ்ச்சிகள் செய்தல் சிரிக்கத்தக்கதே. என் வலிமையை நீ ரறிந்திலர்; அதனை யான் கூறுதல் தகுதியன்று. என்னைப் போருக்கு அனுப்பும், உம்பகைவரை அழித்து வருவேன்."

பானுகோபன்: "தந்தையே, உம்தம்பியைப் பாலகன் வென்ற அன்றே நீர் என்னை அனுப்பினீரில்லை. இன்று வினவுதலாற் பயனென். அறிவின்மையால் உம்மகனை யிழந்தீர். நகரமும் பாழ்பட்டது. யான் சென்று பகைவரைப் பாசத்தாற் கட்டிக்கொண்டு வந்து உம்முன் விடுவேன். நீர் போருக்கு புறப்படுதல் சிறப்பன்று; யான் போய் வென்று வருவேன்."

இரணியன்: "ஒரு பாலகனைக்கருதி இத்துணை ஆய்தல் பெருமையாகுமோ? ஒற்றுவர் சொன்னவுடன் என்னையழைத்து விடுத்தாயில்லை. பாவியேன் என்னதவறு இழைத்தனனோ? என் தமையன் பானுகோபன் சிறுவனுடன் போருக்

குப் பெயர்தல் வசையே. இன்றிரவிலேயே என்னை அனுப்புக."

அக்கினிமுகன் சொன்னதாவது : "நீர் உலகமெங்கும் புகழப்படும் அரசர் ; உமக்குத்துணை வீரகேசரி! உமக்குப் புதல்வர்களாய் யாங்களிருக்கின்றோம். அளவிறந்த தானைகளுள, படைக்கலங்களுமுள; ஒப்பில்லாத இந்திர ஞாலத் தேரும் சிங்கவாகனமு முள. மாய வித்தைகள் பல வுள. இவையனைத்தும் பெற்றுள்ள உம்மினும் பெரியர்யாவர். தூதுவன் செயலை யெண்ணி இரங்கல் தகுமோ, எங்களிலொருவரை யனுப்புமின். அரக்கர்களை வென்றவன் யான். யான் மெலியனன்று. போர் செய்ய விடுமின்."

1 மன்னவர் செவியழல் மடுத்தி தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள், துணைவர், மேலையோர்
ஒன்னவர் விழைந்தவா றுரைக்கின் றார்களே.

2 முற்றுற வருவது முதலும் அன்னதால்
பெற்றிடு பயன்களும் பிறவும் தூக்கியே
தெற்றென வுணர்ந்துபின் பலவும் செய்வரேல்
குற்றமொன் றவர்வயிற் குறுக வல்லதோ.

3 மால்வரு தொடர்பினால் வனத்துச் செல்லு மீன்.
கோல்வரு முணர்வினைக் குறித்து வவ்வியே
பால்வரு புணர்ப்பினில் படுதல் போல நீ
மேல்வரு கின்றதை வினவல் செய்கிலாய்.

சிங்கமுகன்: "மந்திரிகளும் சேனைத்தலைவர்களும் உம் புதல்வர்களும் தங்கள் வலிமையினையே புகழ்ந்தனர். கோபம் பாவஞ் சண்டாளம், அறிஞர் கோபத்தால்வரும் கோடி கேடுகளை இடித்துரைத்தல் வேண்டும். நீதியைச் சொல்பவர்களே

உற்றதுணையாவர். விரும்பியவண்ணஞ் சொல்பவர் அரசருக்குப் பகைவர். வினையையும் பயனையும் இடையூறுகளையும் சீர்தூக்கித் தெளிந்து கூறுதலே பெரியோர் கடமையாம். தேவர்களை வதைசெய்தலா லுற்றது இத்துன்பம். கடல் மீன்களைப் பிடித்துத்தரத் தேவர்களை ஏவினீர். இந்திரனையகற்றி இந்திராணியைப்பற்ற நினைத்தீர். பொன்னுலகை அழித்தீர். தேவர்களைச் சிறைவைத்தீர். அண்ணாவே, இன்னுந் தேவர்கள் சிறையிலிருக்கின்றனர். இரக்கத்தை யொழித்தீர். விதிவலியைக் கடந்தவர் யாவர். எமது சத்தியே உம்மை வெல்லுமென்று அறுமுகர் கூறினது ஞாபகமில்லையோ, தேவர்கள் சிறையை நீக்குவீராயின் முருகவேள் போர் செய்ய நினையார். நமது குற்றம் பெரிதாக நினைக்கப் படமாட்டாது. நீரும் அழியீர், உறுதி."

இவற்றைக் கேட்ட சூரபதுமன் "என்றம்பியே, வஞ்சகத்திலுஞ் சூழ்ச்சியிலும் வல்லை, வல்லை போலும். புதியதொன்றைக் கூறினாய். எம்பெருமானளித்த வரங்களை விலக்குவார் யார். அவை பிழைபடுமோ. கடவுளும் சத்தியும் வேறோ. சத்திவெல்லுமென்பது சொல் வழக்கன்றி உண்மையன்று. தாரகன் வேள்விசெய்து வரம்பெற்றிலனாதலின் உயிரிழந்தான். வச்சிரவாகு குழந்தை யாதலி னிறந்தான். எனக்கொப்பானவர் எவருளர். தனித்த பாலகனோ என்னுயிரைக் கொள்வான்? நீ புகல்வது குருடன் ஞாயிற்றைக் கனியென்று காட்டக் கூழங்கையன் அதனைப்பற்றுதலை யொக்கும்" என்றனன்.

1 எல்லைநாள் வரை பிழைத்ததும் எம்பெருஞ் சத்தி
வெல்லு நுங்களை என்றலும் கண்ணுதல் விமலன்
சொல்ல யான்முன்பு கேட்டிலன் வஞ்சமுஞ் சூழ்வும்
வல்லை, வல்லை கொல், எம்பிநீ, புதிதொன்று வகுத்தாய்.

2 எண்ணி லாததோர் பாலகன் எனைவெல்வ னென் கை
விண்ணில் ஆதவன் தன்னையோர் கனியென வெஃகிக்
கண்ணி லாதவன் காட்டிடக் கையிலாதவன் போய்
உண்ணி லாதபே ராசையால் பற்றுமா றொக்கும்.

உடனே சிங்கமுகன் "அண்ணாவே, கோபஞ்செய்யற்க. யான் சொல்லத்தகுவது ஒரு சொல். அதனைக் கேட்பீராக" என்று வணங்கி உரைக்கலுற்றான்.

"ஐந்தொழிலையுஞ் செய்து மன்னுயிர்களைப் பாதிக்கும் பாசங்களைக் களைந்து, வீடுபேற்றைத்தரத் திருவுள்ளத்திற் கொண்ட பொருளால் வரம் பெற்றீர்; தவமிருந்தீர். குமர வேளைப் பிறந்துழலும் மற்றுயிர்களைப்போன்று நினையாதீர். எம்பெருமானுடைய நெற்றிக்கண்ணி லுதித்தவர். 'தெள்ளிய வாலின் சிறுபழத்தொருவிதை தெண்ணீர்க்கயத்துச்சிறுமீன் சினையினு நுண்ணி தேயாயினும் அண்ணல்யானை அணிபடையுடைய மன்னரிருக்க மாமரமாவதுபோன்று' எப்பொருளும் அவரிடமேபிறந்தன. அருவம், உருவப், அருவுருவ மாகுவர். அவருடைய திருவிளையாடல்கள் எண்ணிறந்தன. ஆன்ம கோடிகள் பலவும் தந்தெய்வ மெந்தெய்வமென்று வணங்கப் படுபவர் அவரே. முழுமுதற் கடவுளைப் பாலகனென்று இகழற்க. உம்மையும் உங்கிளைமுழுவதையும் நொடிப்பொழுதிற் களைய வல்லவர். உடம்பு அழியும். உம் வச்சிரயாக்கையும் அழியும். உம் வச்சிரயாக்கையும், உம் அழியாவாழ்வுங் கருதி இவையனைத்தையுங் கூறினேன். இப்பொழுதே தேவர்களைச் சிறையினின்றும் நீக்குவீராக.' சூரபதுமன் வெகுண்டு சொல்லலுற்றான். 'நேற்றுப்பாலகனைப் பரம்பொருளென்று நினைத்தாய். அது தவறு. குடமுடைந்தபோழ்து குடாகாயம் ஆகாயத்தோடு சேர்வது போல உடலழியும்போது பரம் பொருள் உருவமிழந்து ஒன்றாகவே நிற்கும். முதியோர்கள்

பலரையழித்த தேவர்களையே யாம் சிறை செய்தோம். எம் பெருமான்வரினும் எதிர்க்க வல்லுநன் யான். தம்பியே, நீ எம்முடன் ஒரு வயிற்றிற் பிறந்து, எம்பெருமைகளையு மடைந்துந் தேவர்களுக்குச் சார்பா யிருப்பாயாயின் எமக்கு வேறுபகையும் வேண்டுமோ. பித்தர்போல் பேதைமை கொண்டாய்; நப். குலாசாரங்களை விட்டாய்; மோனமென்பது ஞானவரம்பாதலின் தவஞ்செய்யப் போகுதி; அவுண குலப் பெருமையைக் கெடுக்கத் தோன்றினாய் போலும். உன்னை வருந்திப்பெற்றதாய் உன்னைக்கண்டு வியப்பளன்றோ. சிங்க மானது பகையைக்கண்டால் சீறி அதனைவெல்லும். யாம் பல ரையும் வெற்றிகொண்டு மீளுவம். நீ பதைபதைக்காதே. போகுதி "

இக்கூற்றைச் செவிமடுத்த சிங்கமுகன், " உறுதியைச் சொன்னேன். இவன் வீணாக யென்னை இகழ்ந்தனன். தேன் மழையைச் சொரிந்து வளர்த்தாலும் காஞ்சிரங்காய் இனிக் குமோ; விதித்தது வந்துறும்.

1 உறுதியை உரைத்தனன் உணர்வி லாதவன்,
வறிதெனை இகழ்ந்தனன் வருவ தோர்கிலன்
இறும்வகை நாடினன் யாதொர் புந்தியை
அறிவிலர்க் குரைப்பவர் அவரிற் பேதையோர்.

2 உய்த்தனர் தேன்மழை யுதவிப் போற்றினும்
கைத்திடல் தவிருமோ காஞ்சிரங் கனி
அத்தக அல்லவோ அறிவிலாதவன்
சித்தமதுணர்வகை தெருட்டு கின்றதே.

3 தொலைக்கரும் திருவுடைச் சூரன் புந்தியைக்
கலக்கினும் உய்வகை கருது கின்றிலன்
அலக்கணுற் றிருந்துநாம் இரங்கி யாவதென்
விலக்கரும் விதியையாம் வெல்ல வல்லமோ.

4 ஆவது விதியெனின் அனைத்தும் ஆயிடும்,
போவது விதியெனின் எவையும் போகுமால்
தேவருக் காயினும் தீர்க்கத் தக்கதோ,
தேவரும் அறியொணு ஈசற் கல்லதே.

5 இறப்பது சரதம், மேல் இறைவன் என்னுரை
வெறுத்தனன், இகழுமேல் வேண்டிப் பின்னும் யான்
மறுத்தெதிர் மொழியலன், மன்ன, என்பிழை
பொறுத்தியென்றின்னுரை புகல்வ தல்லதே.

இவர் இறக்குங்காலம் அணுகிற்று· அண்ணலே, என் பிழையை பொறுப்பாயாக; உம்முயிர் மாயும். அதனைக் கண்ணுற்றும் யான் உயிரோடிருத்தல் பிழையாகும். இவருக்குமுன் இறந்து விடுதலே முறையென்று மனவுறுதிசெய்து, யான் போரிற் பகைவர்களைக் கொன்று வருவேன் என்று கூறிப்போர்ந்தனன். இவ்விணக்கமான மொழிகளைக் கேட்ட சூரபதுமன் தம்பியைத் தழுவி குமரவேள் இவண்வரும் பொழுது உன்னை அழைப்பேன், வருவாயாக' என்று விடை கொடுத்தனுப்பினர். சிங்கமுகன், 'அண்ணுவே, போருக்குப் பாலகன் வந்தாலும் நீர் போகாதிர்; யான் விரைவில் வருவேன்' என்று சொல்லித் தன்நகரத்திற்குச் சென்றனன். பெருங்குழுவுங் கலைந்தது.

## கூறு XIV.

### செந்தில்-முருகவேள்.

செந்திலென்பது திருச்செந்தூர். அது முருகன்படைவீடுகளாறி லொன்றும். "தாழ்நீர்

வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை"

என்றனர் மதுரை மருதன் இளநாகனார்.

"உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே"

என்றனர் நக்கீரரும்.

"நாறுமலர்க்
கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திற் பதிபுரக்குஞ் செவ்வேளே"

என்றனர் குமரகுருபரரும்.

முருகப்பெருமானுக்கு ஆறுமுகங்களும் பன்னிரண்டு கைகளும் உளவென்றும், அவற்றின் தொழில்கள் பற்பலவென்றுங் கூறுவர்.

"தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாள்நிற முகனே,
மாயிரு ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம். ஒருமுகம்
ஆர்வல ரேத்த அமர்ந்தினி தொழுகிக்
காவலி னுவந்து வரங் கொடுத்தன்றே. ஒருமுகம்
மந்திரவிதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி யோர்க்கும்மே. ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுறநாடித்

திங்கள்போலத் திசைவிளக் கும்மே. ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட்டன்றே. ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே, ஆங்குஅம்
மூவிரு முகனும் முறைநவின்றொழுகலின்
ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பில்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடு
வண்புகழ் நிறைந்து வசிந்து [1] வாங்கும் நிமிர் தோள்
விண்செலல் மரபின் ஐயர்க்கு [2] ஏந்தியது ஒருகை
உக்கஞ் [3] சேர்த்தியது ஒருகை,
நலம்பெறுகலிங்கத்து குறங்கின்மிசை அசைஇயது ஒருகை
அங்குசங் கடாவ ஒருகை இருகை
ஐயிரு, வட்டமொடு எஃகுவலந் திரிப்ப, ஒருகை
மார்பொடு விளங்க, ஒருகை
தாரொடு பொலிய ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப, [4] ஒருகை
பாடின் படுமணி யிரட்ட, ஒருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட, ஆங்கு அப்
பன்னிருகையும் பாற்பட இயற்றி."

முருகவேளுக்கு மயிலூர்தியும், சேவற்கொடியும் வேலாயுதமும் உள வென்பர்.

"பல் பொறி மஞ்ஞை வேல் கொடி அகவ."
"பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்சம் அகற்றும் அயில் [5] வேலும்."

முருகவேளின் அற்புதச் செயல்களிற்சில இவையேயாம்.

"மங்கை சிலம்பின் மணியொன் பதிற்றோன் றுந்
தங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே."

---

1 பிளந்து முனிவர்கட்கு 3 சுழல 4 மருங்கு, பக்கம் 5 கூர்மையுடைய.

விருப்பா லளிர்தநவ வீரருக்குள் முன்னோன்
மருப்பாயுந் தார்வீரவாகு .........கோன்னெடுவேல்
தாரகனு மாயத் தடங்கிரியுந் தூளாக
வீரவடிவேல் விடுத்தோனே - சீரலைவாய்த்
தெள்ளுதிரை கொழிக்குஞ் செந்தூரில் போய்க்கருணை
வெள்ளமெனத் தவிசில் வீற்றிருந்து - வெள்ளைக்
கயேந்திரனுக்கு அஞ்சல் அளித்துக் கடல் சூழ்
மயேந்திரத்தில் புக்கிமையோர் வாழச்-சயேந்திரனும்
சூரனைச் சோதித்து வருகென்று தடந்தோள் விசய
வீரனைத் தூதாக விடுத்தோனே...காரவுணன்
வானவரை விட்டு வணங்காமையால் கொடிய
தானவர்கள் நாற்படையுஞ் சங்கரித்துப்
பானு பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனை வென்று வாகை முடித்தோய்—சகமுடுத்த
வாரிதனிற்புதிய மாவாய்க் கிடந்த நெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர் வேலோய்—போரவுணன்
அங்கம் இருகூறாய் அடல்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுடன் ஆர்த்தெழுந்து தோன்றுதலும்—அங்கவற்றுள்
சீறு மரவைப் பொருதச் சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்தும் இளையோனே— மாறிவரு
சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே—மூவர்
குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத் தாட் கொண்டளித்த தேவே".

இத்தேவரே இடுக்கணனைத்தும் பொடிபடுத்தி எவ்வரமுமீந்த பெருமான்; மறைமுடிவாஞ்சைவக் கொழுந்து தவக்கடல்; தெய்வயானைபை மணஞ்செய்தோன், கலைமுனிவன் கண்ணருளால் வாம மடமானின் வயிற்றுதித்தோன்.

" உள்ளமுவந்து
ஆறு திருப்பதிகண் டாறெழுத்து மன்பினுடன்

கூறு XV.

## முருகன் பாசறை.

நந்திகணத்தின் தலைவராகிய வீரவாகு தேவர் தூது போய்வந்தவிவரத்தை எம்பெருமானுக்குச்சுருங்கச் சொல்லி விளக்கிக்காட்ட, திருச்செந்தூரிலுள்ள முருகவேள் சூரபதுமனும் அவுணரும் அழியவும், தேவர்கள் துன்பம் நீங்கவும் இனிக் காலந்தாழ்க்காது வீரமகேந்திரபுரிக்குப் போகவேண்டித் தம்தேரைக் கொணரும்படி அவரைக் கட்டளை யிட்டனர். அதனைக் கேட்டுத் தேவர்கள் மகிழ்ந்தனர். தேர்ப்பாகன் வந்ததும் தாம் புறப்பட்டதுமன்றித் தேவர்களனைவரும் தத்தந்தேரில் ஏறிவரும்படி பணித்தனர். படைத்தலைவர் நூற்றெண்மர் குமரக்கடவுளைச் சூழ்ந்தனர். ஆகாயவழியாக கடலைக்கடந்து, இலங்கையை விட்டகன்று, சூரபதுமன் நகர் முன்பு சென்றனர். தேவர்கள் தலைக்கூடிப் பலவாறு ஆராய்ந்து பார்த்து ஒரு முடிவுக்குவந்தனர். சூரபதுமன் நகர் பாவிகள் செறிந்தவிடமாதலால் முருகவேள் அங்கு செல்லுதல் முறையன்று. அதற்கடுத்த எல்லையிற் பாசறை சமைத்துத் தங்கல் தகுதி என்பதாம். தேவதச்சன் 'அங்ஙனே' யென்று விண்ணப்பித்து மாட கூட மண்டபங்கள், வாவி சோலை கோபுர வீதிகள் பொருந்தின பாசறையைச் செய்துமுடித்தனன். அதற்கு ஏம கூடமென்று பெயரிடப்பெற்றது.

" மாடகூட மண்டபம் வளங்கொள் சோலை வாவிகள்
பீடுலாய கோபுரம் பிறங்கு வீதி யோர்திசை
கோடி கோடி யாக்கி மற்றொர் கோநக ரியற்றியே
நாடும் ஏம கூடம் என்று நாமமொன்று நாட்டினன்.

இப்பாசறையில் முருகப்பெருமான் வீற்றிருந்த பொழுது, நாரதமுனிவர் சூரபதுமனிடஞ் செல்ல, நீயார்

என்று வினவ, 'என்பெயர் நாரதன், தேவர்களுக்கு இடர் செய்பவன், சுக்கிரகுருவின் நண்பன்,

" எங்குனை யீங்குவந்த தென்னைநீ யாரை என்ன,
மங்கையோர் பங்கன் மேவும் வடபெரும் கயிலைவாழ்வேன்
உங்குலந் தலைமையாக வைகலும் நோற்றல் செய்வேன்."
"கைதவம் புகலேன், வெய்ய காமமே முதல நீத்துச்
செய்தவம் பலவு முள்ளேன் தேவருக் கிடுக்கண் செய்வேன்.
மைதவிர் புகரினோடு மருவுநண் புடையேன், நின்பால்
எய்தியொன் றுரைக்கவந்தேன், நாரதன்எனும்பேருள்ளேன்."

சிவபெருமான் உன்னைக் கொல்லும் பொருட்டுத் தம் நெற்றிக் கண்ணினின்று கந்தன் என்றமகனை உண்டாக்கி யுளான். தேவர்கள் அவனிடம் தங்கள்குறைகளைச் சொல்லி முறையிட்டனர். அவற்றைக் கேட்டுக் குமரவேள் அவர்களை 'அஞ்சற்க' வென்று ஊக்கித்துச் செந்திற்பதியிற் றங்கி, ஒற்றனொருவனையனுப்பி, நிகழ்ச்சிகளை அறிந்து, உன் நகரின் வடபக்கலில் வந்திறங்கி, பாடிவீடொன்றை யமைத்துப்போர் விளைத்தற்கு யத்தனஞ் செய்துளான் என்றனர். சூரபதுமன் கோபித்து, 'சாம்பலைப்பூசுகின்ற சிவகுமானு என்னோடு போர்செய்ய வல்லவன் ?'

"ஆழிய தெண்டிரை ஆழிகடைந்தவன் அலைகில்லா
வேள்வி புரிந்திடு வாசவ னம்புயம் மிசைமேயோன்
வாழிய நம்பெயர் கூறினும், அஞ்சினர் முறைகுற்றார்
பூழி புனைந்தவர் பாலகனோ அமர் புரிவானே".

என்று வீரம்பேசி, 'கந்தனைக்கடுகி வெற்றிகொள்வேன் முனிவனே இதனைக் காண்குதி' என்று கூற. நாரதர், இவன் 'நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங்காலமதில் கொண்டகரு வழிக்குங் கொள்கை' போன்று தன் செயலால் கிளையோடழியக் கடவ னென்றுன்னி, சூரபதுமனை நோக்கி, ' இது

நன்று. காலதாமதஞ் செய்யற்க, உன் படைகளை அனுப்புதி, உனக்கு வெற்றிநாடித் தவஞ்செய்யப் போவேன்' என்று புன்முறுவல் செய்தனர். விடைபெற்றுச் சென்ற நாரதர் குமரேவளிடம் போய்த் தேவர்கள் துன்பத்தை ஒழிக்க நல்ல காலம் நணுகியது. அதனை ஆற்றுவித்தல் அகத்தியமென்று வணங்கி விண்ணப்பித்தனர். குமரவேள் வரவை ஒற்றர்கள் யறிவிக்க, சூரபதுமன், 'குமரவேள் வீரத்தை யழிப்பேன். மதியில்லாப் பாலகனென்று விடேன்' என்றுதுணிந்து, தன் மகனாகிய பானுகோபனை யழைக்குமாறு பணித்தனன். தூதுவர்கள் சென்று அழைக்க, பானுகோபன்வந்து 'வீராதிவீரனாகிய என்தந்தையே, சிவகுமரன் இங்குவருமுன் எதிர்ந்து போர் செய்வேன்' என்றனன். அதைச் செவியால் வாங்கிய சூரபதுமன் 'மைந்தனே, இந்திரன் வேண்டுதற்கிணங்கி எம்பெருமான் குமரவேளைக்கொண்டு பூதவீரர் துணையுங் கூட்டி என்னுடன் போர்செய்ய விடுத்தனன். ஆகையால், நானும் என் மகனாகிய உன்னைக்கொண்டே அவர்களைக் கொன்றுகளைந்து வெற்றிபெறுவது வழக்காகும். உன் படையுடன் சென்று போர்க்களமடைந்து நீ போர்புரிந்து வெற்றியுயாடுவருதி' என்றனன்.



## கூறு XVI.

## பெரும்போர்—முதனாள்.

தந்தையின் கட்டளைப்படி பானுகோபன் போர்க் கோலங் கொள்ளுமாறு ஆயுதசாலைக்குப்போய் வீரதேவியை வணங்கிப் பட்டுடுத்து அரையிற் கச்சையைக்கட்டி வாட் படையைப் பக்கலிற் செருகி வீரக்கழலையுங் கவசத்தையு மணிந்து கோதையைக் கையிற்சுற்றி, விரலிற் புட்டிலை அணிந்து அம்பருத் தூணியை முதுகிற்கட்டி, நெற்றியில் வீரபட்டிகையைச் சேர்த்தி பல வாபரணங்களையும் போர்க் கெழுதற்கடையாளமான தும்பை மாலையை முடியிலே சூட்டிக்கொண்டு பலவீரர்களுடன் போருக்குத் தயாராயிருந் தனன். தன்சாரதியை நோக்கி 'நமது தேரை முருகனிருக் கைக்குச் செலுத்துக' வென்று கட்டளையிட்டனன்.

வீரவாகுதேவர் ஆயிரவெள்ளம் படைசூழ்ந்துவர பானுகோபனை எதிர்பார்த்து, சிம்புட் கூட்டத்தைச் சிங்கங் கள் வெல்லவல்லவோ என்று நாரதரை நோக்கிக் கூறினன். பூதவீரர் அவுணருடன் போர் செய்தனர். குமரனனுப்பிய படை வந்துற்றது. சிங்கனென்ற பூதவீரன் பானுகோபனைத் தாக்கினன். உக்கிரனும் எதிர்த்தான். பிணிகிமலையைப் பிடுங்கி எறிந்தனன். பானுகோபன் அம்புகளைப் பொறுக்கமுடியாமல் பூதவீரர் உடைந்துபோயினர். பத்து நூறுயிரவர் தங்கள் தேர்களைச் செலுத்தினர். ஐராவதந் துன்புற்றது. நவவீரரு ளொருவனான வீரகேசரி பானுகோபனைக்கண்டு வில்லை வளைத்தெய்தனன். வீரன் மயங்கி வீழ்ந்தனன். தேரும் வில் லும் அழிந்து வீரனென்னும் பெயருங் கெட்டுத் தன்னந்

தனியனு யிருப்பதைக் கண்ட வீரமார்த்தாண்டன் எதிர்வர, பானுகோபன் வெகுண்டு நெற்றியிற் குத்தினன். இவ்வாறுக வீரர்களையெல்லாம் வெற்றிகொண்டனன். வீரவாகு தேவர் முன்வர, பானுகோபன் " நீயோ வேலினல் தாரகனையட்ட சூரனுமில்லை. ஆதி வராகமாய்ப் பூமியைக் கிளைத்திடு மரியு மில்லை. நான்முகனு மல்லை. இந்திரனுமல்லை. தூதனுகி வந்த நீயோ என்னுடன் போர் செய்யவல்லை. இழைத்தமாயையால் மூற்பகற் போந்தனை. எங்கோன் முன்னே பழித்திறம் பேசினை. என் னம்பியையுங் கொன்றனை. இம் மாநகரையு மழித்தனை. யான் அதையு மறிந்திலேன். அதனுல் பிழைத் தனை, இனியேனு மிங்கே பிழைத்திடப் பெறுவாயோ. உன் னுயிரை யமனுலகத்திற் புகுவிப்பேன், உண்மையிது. தூத னைக் கொன்ற பழி ஏற்படும். உன் துணைவரை வெற்றி கொண்டேன். பூதர்களை வென்றேன்: உன்னை யனுப்பிய குமரனையு மழிப்பேன். இந்திரனையுஞ் சிறையிடுவேன்" என்றபோது, வீரவாகு தேவர் ' வெற்றியடைபவர் தம் பெரு மிதந் தாமே கூறுர். விரைந்து போர்செய் " என்ருர். பானு கோபன் 'உம்முடலை இறைப்பொழுதில் சின்னபின்னம்படச் செய்வேன், இலையெனின் உயிர்வாழ்க்கை விரும்பேன், என் வில்லுடன் எரியிற் குளிப்பேன் " என்று பகர்ந்து வில்லை வளைக்க வீரவாகுதேவர் முதலானோர் மயங்கினர். குமரன் அமோகப்படையை விடுத்தனர். பின்னர் வீரவாகுதேவர் சிவப்படையெடுத்துவிட முன்வந்தனர். இப்படையால் தானிறந்துபோவது நிச்சயம் என்றுணர்ந்து பானுகோபன் மறைந்தனன். தேவர்கள் மகிழ்ந்தனர். வீரவாகு தேவர், ஓடி ஒளிப்பவனைத் தேடித்திரிதல் நலமோ, என்று நினைத்துக் குமரன் பாசறைக்குச் சென்றனன். இன்றிரவு சிறிது போர்ச்சடைவு வொழிக எனக் குமரன் பணிக்க வீரவாகு

தேவர் தன்னிருக்கைக்குப்போயினர். பானுகோபன் தன் தந்தையின் மாளிகையையணுகாமல் மனந்தளர்ந்து வெற்றிகொள்வதற்கு வழியாய்ந்து கொண்டிருந்தனன். அதனையறிந்த சூரபதுமன் 'நாளை நானே கந்தனை வெற்றிகொண்டு மீள்வேன்' என்று வீரர்களைப்போகும்படி சொல்லினன்.

"மைந்தருந் துணைவரு மருவுபல் சுற்றமுந்
தர்திரத் தலைவருஞ் சமரினுக் கேகலர்
நந்தலில் படையொடு நாளைநான் சென்றுபின்
கந்தனைத் திறல் கொடே கடிதில்மீண் டிடுவனால்"



## கூறு XVII.

## பெரும்போர்—இரண்டாநாள்.

ஆயிர வெள்ளஞ்சேனையும் அமைச்சர்களும் புடை சூழ்ந்துவர சிங்கமுகன் மகன் அதிசூரனும், தாரகன் மகன் அசுரேந்திரனும் சூரபதுமனை வணங்க. அன்னுரைக்கண்டு, கடல்போல நிறைந்த கோட்டகம் கரையில்லாத விடத்துச் சிறிது உடைந்துவிடுவதுபோலப் போர்செய்கின்ற நால்வகைப் படை பலவுளவாயினும் அதைக் காக்கு அரசரில்லாதவழி நில் லாதழியும், நீவிரிருவரும் சேனைத்தலைவராய் முன் போகுக வென்று பணித்தருள, அவர் அவ்வண்ணமே சென்றனர். உக்கிரனை நோக்கி உன்னைச் சிதைப்பேனென்றனன். அதிசூரன் சோமுகன் வீரவாகுவை எதிர்த்தான். வீரவாகுதேவர் சூரபதுமனைத் தாக்கித் துயரத்தோடு வீழ்ந்தார். 'விவேக மில்லாத பேதாய், நீயா என்னோடு போர் செய்யவல்லை' என் றிழிவு கூறினன். குமரக்கடவுள் 'வாயாட லாண்மை யாமா? கூடுமானல் போர்செய்' எனப் பலபாணங்களைச் சூரபதுமன் மாரிபோன்று பொழிந்தனன். ஆயினும் அரசனுடைய வில்லும் தேரும், சூலப்படையும் அழிந்தன. சூரபதுமன் 'நாளை மட் டில்லாத சேனையுடனேவந்து போர்செய்குவன்' என்று மாயமாய் மறைந்தனன்.

"வசையதன்றிது செருச் செய்வோர் பற்பகல் மலைந்து
விசைய மெய்தினு மேன்மையாம் வியப்புமா மேலும்
திசை விளக்குறு புகழுமாம் யானு மிச் செய்கை
இசைவதே கடன் அறிஞர்தஞ் சூழ்ச்சியு மீஃதே."

சில பூதவீரர் அதிசூரனோடு வடக்கு வாயலிற் யுத்தஞ் செய்தனர். மதிலும் கோபுரமும் இடிந்து போயின. மயனை யழைத்து 'இடிந்தனவற்றை எடுப்பிக்க' வென்று கட்டளையிட்டு, மாகாயனே, 'நீ வடக்குவாயிலைக் காத்திரு' என, அவனும் அவ்வாறே செய்யச் சென்றான்.

"அடுகரி புரவி தேர் அவுணர் தானையாங்
கடலுடன் சென்றுமா காய னென்பவன
வடமதிற் சிகரியின் வாய்தல் போற்றியே
சுடரெழு தீபிகை சுற்ற வைகினான்."



கூறு XVIII.

## பெரும்போர்—மூன்றாநாள்

பானுகோபன் மனம் புண்ணாகித் தன் தாயை நினைத்த தும் அவள் தோன்ற, அவளிடம் தன் குறையை விண்ணப் பிக்க, அவள், 'அப்பா. ீ மறைநெறி பிறழ்ந்தாய். தேவர் களைச் சிறையிலிட்டனை. தேவேந்திரனையு முறைகெடச் செய்தாய். முனிவர் தவத்தையழித்தனை; முழுமுதலே உன் பகைஞர். நீ எங்ஙனம் உயிர் வாழ்வை; கெட்டவழியில் நடந்து தோல்வியடைந்தாய். விதியை வெல்லுநர் யாவர். வேண்டியதைக்கேள்' என்று பரிந்துகூற, அவள் மாயவில்லை விதித்துக் கொடுத்து 'இற்றை நாளுனக்கு வெற்றி' என் றாக்கினள். அதனைக்கேட்ட வீரவாகு தேவர் பானுகோப னுயிரை வாங்குவதாகச் சொல்லியனுப்பிவிட்டு இறைவனை வணங்க, இறைவன் 'வீரவாகுவே, போரில் பானுகோபன் எந்த அம்பினை விடுகின்றானோ அதற்கெதிர் அம்பு தொடுத் துவிடுவேன். மாயை செய்வானாயின், நம் வேற்படை மாயை யை வெல்லும். நீ விரைந்து செல்க' எனலும் அவன் போர்க் களங் குறுகினன். பூதவீரரும் அவுணவீரரும் தம்மிற் கை கலந்தனர். முடிவில் மாயையின் வில்லை வளைத்துவிட அது வீர வாகு தேவருடைய சேனையனைத்தையுங் கட்டிக்கொண்டது. பானுகோபன் தந்தையிடஞ்சென்று நிகழ்ந்ததை யுரைத் துத் தன் மாளிகையை யடைந்தனன். நாரதர் குமரவேளிடம் நிகழ்ந்ததைக்கூற அவர் வேற்படை விரைந்தேகி மாயையின் வலியைக் கெடுத்து மயங்கி நின்ற வீரவாகு தேவராதியர் தெளிந்து தேற வீரவாகுதேவர் 'மாயையால் நம்மை வென்று

ஓடிப்போன கள்வனாகிய பானுகோபனைத் தலையறுத்தல்லது குமரவேள் முன் செல்லேன்' என்று புகன்று மகேந்திர புரியின் மேல்வாயிலை யடைந்து அதனைக் காத்துக்கொண் டிருந்த புலிமுகனைக்கொன்று, எரியம்புகளைவிட நகரமழிய சூரபதுமன் மேகங்களையேவி மழைபொழியச்செய்ய எரி யடங்கிற்று. வீரவாகு தேவர் வடவாமுகாக்கினியில்லை வழங்க மேகங்கள் கடலில் வீழ்ந்தன. மனத்தூய்மை யுற்றவனும் செந்நெறிச் செல்பவனுமாகிய இரணியப் புதல்வன் சூர பதுமனை யணுகிச்சொன்னதாவது: 'பொன்னுலகத்தின் பல ரையும் சிறையிலிட்டது தவறு, பெரும் பாவம். அன்னாரை வென்றது எம்பெருமானுடைய வரத்தின் பயனேயாம். எம் பெருமானுக்கிணங்காதவர் என்றுந் தணந்தனரேயாவர். எம் பெருமானின் பாலகனே எமக்கு எதிரியாக வந்துளர். ஆவ லால் போர்செய்தல் அழகேயன்று. சுரர்களை விடுவிக்கவே குமரன் வந்துளர். அவரை வணங்கி, பிழைபொறுத்தருள்க எனவேண்டினால் அவர் கைலைபோய்விடுவர்' என்பதாம். தந்தைமுகஞ் சினக்கக்கண்டு இரணியன் கூறுவான். "அடி யேன் பிழையை மன்னிக்க. யான்போர்செய்வேன். பகை வரைத் தொலைப்பேன்" இதனைக்கேட்டவுடன் சூரபதுமன் சினந்தணிந்தது. மனமகிழ்ந்தது. இரணியன் போர்க்கோலம் பூண்டு படைகளை யனுப்பிவிட்டு மேற்றிசையை நாடிநடந் தான். பூதப்படையும் அவுணர் வெள்ளமும் முன்போன்று கைகலந்தன. இரணியன் பூதப்படையை இரியல் போலச் செய்தான். நீலனென்பான் இரணியன் தேரை எடுத்தெறிந்து அவனைக் காலாளுருட்டினன். பின்னர் நீலன் தளர்வெய்திய சமயத்தில் வீரவாகுதேவரும் இரணியனும் பாணங்களை விடுத்தனர். 'தந்தையும் அவர் இளவலும் இறந்துபடுவது

திண்ணம் பானுகோபன்வகையும் இறந்துபடும்: அன்னார்க்கு ஈமக்கடன் செலுத்த மரபினரில்லாமற் போதலுங்கூடும். ஆதலால் யான் மீனுருக்கொண்டு கடலிலொளித்துக் கொள்வது நலம்' என்று கூறி மறைந்துபோனதை அவுணர்கள் சூரபதுமனிடந் தெரிவிக்க அவனுடைய மற்ெறாரு மகனாகிய அக்கினிமுகன் 'தான்போய் பூதப்படையையும் குமரவேளையும் வாட்டிவருவேன்' என்று வெளிக்கிளம்பினன். அரசன் மனங்குளிர்ந்தது. மாளிகைக் குட்சென்றனன்.

---

## கூறு XIX.

### பெரும்போர்—நான்காநாள்

ஞாயிறு தோன்றிற்று. அக்கினிமுகனெடு சென்ற படைகள் வருந்தின. அநேகம் பூதரை அவன் கொன்றான். வீரபுரந்தரன் அக்கினிமுகனையெதிர்க்க அவன் பல பாணங்களைத் தொடுத்துவிட அஞ்சாநெஞ்சினராகிய பகைவர் தேர்களழிந்தன. வீரவாகுதேவர் தம் தேரைச் செலுத்தி வெகுநேரம் போர்புரிந்தனர். அக்கினிமுகன் பல அத்திரங்களையுமேவ, அவை பகைவர் கணைகளாற் பட்டுவிழ, உடனே மனம் வருந்தி, காளியை வணங்க, அவள் பூதர்களைத் தாக்கினள். வீரவாகு கோபங்கொண்டு அவளுடைய சூலப்படையைத் தகர்த்தனன். பின்னர் தன்னொருகையால் காளியின் எண்கைகளையு மொருசேரப் பிடித்துக் கொண்டு அவள் மார்பின்மீது மோதினன். அவள் மூர்ச்சையிழந்து எழுந்து வீரவாகுவைப் போற்றிச் சென்றனள். அதனைக் கண்ணுற்ற அக்கினிமுகன் வெறியுண்ட களிறுபோல மோத நவவீரத்தலைவன் அவன் வில்லையொடித்துத் தலையையு மறுத்துத்தள்ளினன். தம்பியரெழுவர் மாண்டு போனதைக் கேட்ட வீரவாகு கண்ணீர் சொரியப் புலம்பினன். 'நீ என் தம்பியர் உயிர் கொண்டாய்' என்று கூறி, ஒரு கணையை விடுத்தனன். அது யமன்முன்விழ, அவன் அதை எடுத்துப் படித்துக் கையிலிருந்த எழுவரையுங் கொணர்ந்துவிட, அதையறிந்து தூதுவர்கள் சூரபதுமனிடந் தெரிவிக்க, அவன் துணைமக்கள் மூவாயிரவரும் போர் தொடங்கினர்.

நூறாயிரவரில் ஆயிரவர் மாண்டனர். அன்னார் தேர்கள் அழிக்கப்பட்டன. விற்போர் மற்போர் நிகழ்ந்தன. விசயனொழிய ஏனையர் வருந்தினர். விசயனால் மாண்டவர் மீண்டு மெழுந்து போர் புரிவதைக்கண்டு அவன் அதிசயித்து முரு

கனை நினைக்க, குமரவேள் ' அப்பா அன்பனே, இவ்வாறு இறந்தவரெழுந்து எதிர்த்தல் பிரமாவின் வரம்பெற்றதாலுண்டாய பயன் ” என்று புகன்றனன். மாயாஸ்திரத்தை அசுரேசனேவினதும் விசயன் வயிரக்கணையை விடுத்தனன். அது மூவாயிரவரைக் கொன்றது. அதனைக்கேட்ட சூரபதுமன் ஒவென்று அழுது புலம்பினன். ஞாயிறுபட்டது.

இரவில் தருமகோபன் தான் சென்று குமரவேளை வென்று வருவேனென்று கழறி புண்டரீக மென்ற திசையானை மீதேறி நடத்தினன். பூதர்களும் அவுணர்களும் போர் செய்தனர். இருமருங்கிலும் பலர் ஆற்றலற்றனர். வீரமார்த்தாண்டன் இலக்கத்தவரைக் கொன்று குவித்தான் அதனைப் பார்த்துப் பொருது திசையானை பலரைக் காலால் துவைத்தும் கையா லெடுத்தெறிந்தும் வருத்தஞ் செய்தது. வீரமார்த்தாண்டனும் தருமகோபனும் ஒருவர்மேலொருவர் கணைகளை எய்தனர். வீரபுரந்தரன்மேல் தருமகோபன் கதை படவே அவன் மயக்கங்கொண்டு வீழ்ந்தனன். திக்குயானை வீரவாகுதேவரின் தேரையும் பாகனையும் கோட்டுகளா லெறிந்து அழித்தது. நவவீரத்தலைவர் யானையை வருத்தினர். தருமகோபன் வயிரப்படையை அவர்மேலேவ அதைப்பிடித்து அவர் தருமகோபன் மீது செலுத்த அவன் பதைபதைத்துவீழ்ந் துயிர்நீங்கினன். உடனே அவுணப்படைகள் தலைவிரிகோலமா யோடிப் போயின. தருமகோபனிறந்த செய்தியைக்கேட்ட சூரபதுமன் துன்பக்கடலி லழுந்தி அசைவற் றிருந்தான்.

“பழுதடைத் திறன் மந்திரி பட்டசொல் வினவி
முழுதசுற்றிய இன்னலம் புணரியின் மூழ்கி
அழுதயிர்த்து மெய்யுயிர் பதை பதைத்திட அங்கண்
எழுது சித்திரப் பாவைபோ லுணர்வுபோ யிருந்தான்.”

## கூறு XX.

## பெரும்போர்—ஐந்தா நாள்.

தந்தைக்குண்டான துயரத்தை யறிந்து ஞாயிறுதோன் றினதும் பானுகோபன் போர்க்களம் புகுந்தனன். பூதவீரர் கள் வருந்தினர். வீரவாகு தேவர் தெய்வப்படைகளை விடுத் தனர். இருவரும் ஒருவர் தோளை ஒருவர்வெட்ட வீரவாகு பானுகோபன் தலையைவெட்டித் தள்ளினர். முருகவேள் வீரவாகு தேவரைப்பார்த்து 'நீ மிகவருந்திப் பானுகோபனை வெற்றிகொண்டனை போலும்' என்றனர். வீரவாகு தேவர் குமரவேளின் பேரன்பு பெற்று அவரடி வதிந்தனர். உறுப்பு கள் பலதுணியப்பட்டுக்கிடந்த பானுகோபனைத் தந்தைதாயார் கண்டு அவற்றினைப் பொருத்திப் பார்த்தனர். இருவரும் அழுது புலம்பினர். குடிகளுந் துன்புற்றனர். பின்னர் சூர பதுமன் இவ்வுடம்பை அமர்க்களத்தில்வைத்திருக்கப் பணித் தனன். மாயாபுரத்தினின்று சிங்கமுகனை வரவழைத்து நடந் தனவற்றை விவரமாகக் கூறிய தேவகண்டனடியை வந்தித்து யான் செய்யும்பணியாது' என்றனன். சூரபதுமன் உடனே 'நீ விரைந்து சென்று பொருது வென்று வா' எனக்கூறினன். சிங்கமுகன் வருகின்றானென்பதைக் கேட்ட தேவர்கள் பூதர்கள் நடுக்கமெய்தினர். குமரவேள் களம்புக வெண்ணி னர். வீரவாகுதேவர் தம் மெட்டுறுப்பும் நிலமுறப்பணிந்து 'சிங்கமுகனை நானே கொன்று வருவேன்' என்று விடைபெற் றேகினர். போர் தொடங்கிற்று. தசமுகன் சக்கரத்திற் கிரையாயினன். துன்முகன் பல்லுருவெடுத்துக் கொடும்போர் புரிந்தனன். வீரமார்த்தாண்டன் மாயவுருவை வெளியாக்கி

அவன் அருவமாக ஓடிப்போகச் செய்தனன். சிங்கமுகன் பூதர்களை வெட்டியும் வீசியும் தொலைத்துப்போக, அக்கினிக் கண்ணன் சிங்கமுகனை யெதிர்த்தனன். கண்ணன் அடிபட்டு விழவும் சுமாலிவந்து போர்புரிய, அவனையும் சிங்கமுகன் வீழ்த்தினன். தண்டியும், பின்பு எண்வீரரும், இரியல் போயினர். இந்நிலைமையை அறிந்த வீரவாகுதேவர் வாட் போர் நிகழ்த்தினர். சிங்கமுகன் மக்கள் நூற்றுவரும் மாண்டதைக்கண்டு சாலவருத்தமுற்று, வீரவாகுவை நோக்கி நீ யாரென்று வினவ, அவர் சொல்ல லுற்றார்.

“ அல்லுறழ் கண்டன் தந்த அறுமுகற் கடியனேன்
தொல்லைநம் மூதூரட்டுத் தூதனுமாகி மீண்டேன்
எல்லையி லுமரை யெல்லா மீண்டொரு கணத்தின் அட்டு
செல்லுவ தமைந்து நின்றேன் வீரவா கென்பே ரென்றான்.”

“யான் முருகவேளுக்கு அடித்தொண்டன். தூதுவனாக வந்து உங்களூரை யழித்தேன். அறவழிநில்லாத உங்களைத் தொலைக்கவே வந்துளேன்; என்பெயர் வீரவாகு” என்றலும், சிங்கமுகன் ‘உன்னையும் உன்னிறையாகிய முருகவேளையும் இமைப்பொழுதில் வெல்வேன்’ என மொழிந்தனன். இருவரும் பலபாணங்களையும் வாட்களையும் சூலாயுதத்தையும் எவ, சிங்கமுகன் சாரதி வீழ்ந்தனன். அதன்பின் அவன் தேர் அழிந்தது. வீரவாகுதேவர் மார்பினின்று குருதிவெள்ளம் புறப்பட்டது. சிங்கமுகனுடைய மாயாபாசம் பூதர்களையும் வீரர்களையும் பிணித்துக் கடலுக்கப்பால் கொண்டுபோய் விட்டது. தேவர்கள் முருகவேளிடம் விண்ணப்பிக்க அவர் சிங்கமுகனெதிரே தோன்றினர். அவுணர்களும் பூதர்களும் கைகலந்தனர். பூதர்களனைவரும் தாக்குண்டு மயங்கினர். கோபுர வுச்சியிலேறிப் போரைப்பார்த்திருந்து மகிழ்ந்த சூரபதுமன் பல அவுணத்தானைகளை அனுப்பினன். குமரவேள்

தம் கையிலிருந்த வில்லைக் குணத்தொனி செய்தனர். சிங்கமுகன் பிள்ளையாரைக் கிட்டிக்கூறியதாவது. "எங்களுக்கும் தேவர்கட்குந் தீராப்பகை. தேவர்களுக்குத் துன்பஞ் செய்வது இயற்கை. நீரெமக்குப் பகைவரிலர். நீர் போர்க்களம் வரக்காரணம் யாது" என்று வினவ,

" உறைதரு மளியன் தன்னை வலியவ னெறுக்கி ஞடி
முறைகெழு தண்ட மாற்றி யண்டங்கண் முழுவதுக்கும்
இறையினைப் புரிதுமற்று னீவிர்க ளிமையோர்க்கிட்ட
சிறையினை யகற்ற வந்தேம் செருவு மத்திறத்துக் கென்றான்."

பிள்ளையார், 'அகதிக்குத் தெய்வமேதுணை. மெலியாரை வலியார் வருத்துவராயின் அவரைக் கோறலே எமது கடமை. எளியாரைக் காப்பதே எமது விரதம்' எனப்பதிற்புகல, சிங்கமுகன், 'நீர் போராற்றலையுடையீர். அவுணரோ வலியற்றவர். நீர் போர்தொடங்கும்' என்றனன். உடனே குமரவேள் நாராசக்கணையை ஏவ அதுசிங்கமுகன் மார்பைத்துளைத்தது. சிங்கமுகன்பிள்ளையார்மீது கதையை எறிந்தனன். பிள்ளையார் கதனைப்பொடியாக்கினர். பூதவீரர்கள் வெளிப்பட்டு அவுணர்களிறக்கச்செய்தனர். பிள்ளையார் சிங்கமுகன் கையைத் துணித்தனர். அக்கை முளைத்தது. வெட்டுண்ட தலையும் அங்ஙனமே தோன்றிற்று. தோன்றவே முருகவேள் தம் கையிலிருந்த வயிரப்படையை விடுக்க அது சிங்கமுகன் மார்பிற்றைத்து அவனுயிரைப் போக்கியது. தேவர்கள் பூமாரி பெய்தனர். குமரவேள் பாசறை குறுகினர். தன்புதல்வன் மடிந்ததைக் கேள்விப்பட்ட சூரபதுமன் புலம்பி யழுதனன். பகல் பட்டது. இருள் மூண்டது.



கூறு XXI.

## பெரும்போர்—இறுதி

பின்னர் பகலவன் ஒளிவிச சூரபதுமன் நால்வகைச் சேனு சமுத்திரஞ் சூழப் போர்க்களங் குறுகினன். பிள்ளை யாரும் வீரர்களுடன் வந்தனர். நவவீரர்கள் அவுணப் படை களை எதிர்ககத் தலைப்பட்டனர். சூரபதுமனுல் பூதர்களிற் பலர் மாண்டனர். பிள்ளையார்தேர் அவுணப்படைகளைக் கொன்று குவித்தது. சூரபதுமன் குகப்பெருமானை நோக்கி, 'எம் பெருமானளித்த வரத்தால் யானிறவேன். என் ஏவலர் சொ ல்லைக்கேட்டு நீர் இவண் வந்துற்றீர். உம்மை யான் விடுவ தில்லை' எனமொழிய, முருகவேள், "தேவர்களை வருத்துங் கொடியன் நீ, வம்புமொழிகளை வழங்கினுய். எம் அம்புகள் விடையளிக்கும்" என்று மறுமொழி கூறினர். சூரபது மனுக்கும் பிள்ளையாருக்குங் கடும்போர் தொடங்கியது. அவுணப்படைகள் குவியல் குவியலாக வீழ்ந்தன. சூரபது மன் பரமசிவனளித்த சக்கரமொன்றைக் குமரவேளின் மீது வீசினன். அது பயன்படாது போனதைக்கண்டு சூரபது மன் மாயாவுருவங் கொண்டு போர் செய்தனன். பிள்ளையா ரின் ஞானுத்திரம் மாயவுருவங்களைக் கெடுத்ததுஞ், சூரபது மன் தாயை நினைத்தனன். மாயை வந்து தோன்றினுள். இற ந்துபட்ட அவுணச்சேனைகள் மீண்டுமெழ மருந்து அளிக்க வேண்டுகிறேன், என்று சொல்ல, அவள் சஞ்சீவி மலையைக் கொண்டுவரச் செய்து துயின்று கிடந்தவரை யெழுப்பினள். அதுகண்ட பிள்ளையார் சிவாஸ்திரத்தை ஏவினர். அது அவுணரை மீண்டு மழித்தது. சூரபதுமன் தன் இந்திர ஞால த்தேரை விடுத்தனன். பிள்ளையார் அதனைப் போகவிட

வில்லை. அசைவின்றி நின்ற தேரைக்கண்டு அரசன் மனந் தளர்ந்தனன். பின்னர் சூரபதுமன் பற்பல மாயவடிவங்கொண்டெழ ஒவ்வொரு தோற்றத்தையும் பிள்ளையார் தம்கணைகளா லொழித்தனர், தற்பரவடிவமாய் நின்றனர். அதனைக் கண்டு சூரபதுமன் பலவாறு நினைத்துப் புகன்றனன். "இவ்வுருவத்தை முற்றிலுங்காண வல்லுநர் யாவர். இவருண்மையை வீரவாகு முன்னர் கூறினனே. பாலகனென்று எண்ணி மதிமோசம் போனேன். பரம்பொருளே குமரவேளென்று என்தம்பி சிங்கமுகனும் என்னிளம் புதல்வன் இரணியனும் எடுத்தெடுத்துச் சொற்றனரே. திருவுருவத்தை எண்ணிலாத யுகமேத்தி நின்றாலும் காணவுமியலாது, கருதவுமியலாது. எளியனோடு போர் செயவந்தது அவரருளன்றோ. என் வெகுளி ஒழிந்தது. போர் முயற்சியும் மருகியது. இவரிடத்தே அன்பு பெருகுகின்றது. அகந்தை நீங்கி மெய்யுணர்ச்சி பிறக்கின்றது. வலத்தோளுங் கண்ணுந் துடிக்கின்றன. இவர் திருவுருவ முழுதையுங் கண்டேன். இவரை அடைந்து தொழுது வணங்கித் துதித்து ஆளாகி வாழுதலே பிறப்பின் பயன்" என்பதாம். பின்னர் சூரபதுமன் ஆணவமிகுந்து "யாரெமக்கு நிகர். காயம் அழியாத யாமோ கருத்தழிய வல்லேம். இவருயிர் குடித்தே என் கோபந்தணியும்" என்று சீறி இருளுருவங் கொண்டு நின்றனன். தேவர்கள் வெருவி இறைவனே புகலிடம் என்று குமரவேளை யடைந்து விண்ணப்பித்தனர்.

"நண்ணினர்க் கினியா யோலம்
ஞான நாயகனே யோலம்
பண்ணவர்க் கிறையே யோலம்
பரஞ்சுடர் முதலே யோலம்
எண்ணுதற் கரியா யோலம்
யாவையும் படைத்தா யோலம்

கண்ணுதற் பெருமா னல்குங்
கடவுளே யோல மோலம்."

குமரவேள் 'அஞ்சற்க' என்று கையமைத்து வேற்படை தொடுத்தனர். சூரபதுமன் மார்பை வேல் பிளந்தது. சூரபதுமன் சேவலுமயிலுமாக வுருவங்கொண்டு வந்தனன். குமரவேள் மயிலை வாகனமாகவும், சேவலைக் கொடியாகவு மிருக்கக் கருணை செய்தனர். தேவர்கள் சூரபதுமனின் வேரறுத்திரென்றும், தீநெறி யொழிந்து செந்நெறி பெற்றோமென்றும், உமக்கே தொழும்பு செய்யப்பூண்டோமென்றும், போர்க்களத்தே ஏத்தி நின்றனர். சூரபதுமனுடைய வாழ்க்கைத்துணைவியாய கோமளை மணமக னிறந்ததைக்கேட்டுத் தலையளியால் தன்னுயிர் நீங்கினள். ஏனைய மனைவியர் எரிவாய்ப்பட் டிறந்தனர். இரணியன், 'உன்னைக் காவாதொளித்த கடையேன்' என்று புலம்பினன். பின்னர் குருவிடஞ்சென்று முதுகுரவரிருவருக்கும் தாய்மார்கட்கும் துணைவர்கட்கும் ஈமக்கடனை விதிமுறை செய்து எம்பெருமான் அடியடைந்து நோற்றனன். வீரவாகுதேவர் இந்திராதியர் பலரையும் சிறையினின்று மீட்டனர். சயந்தன் தந்தையாகிய இந்திரனை யஞ்சலிசெய்தனன். இந்திரனும் மகனைவாரியெடுத்து மார்புறத் தழுவி முத்தமிட்டனன். மகேந்திர புரமும் வருணனதாணைப்படிக் கடலிற் படிந்தது. இரவு கழிந்தது. ஞாயிறு கிளம்பிற்று; குமரவேளும் எம்பெருமானை ஆகமவிதிப்படிப் பூசித்தனர். அதன்பின் குமரவேள், செந்திற்பதியை விட்டகன்று திருப்பரங்குன்றத்தில் வீற்றிருந்தருளினர்.

" மலரயன் ஆதியாம் வரம்பிலோ ரெலாம்
பலர்புகழ் குமரனைப் பரவி வைகினர்
உலகினில் யாரையும் ஒறுத்த தானவர்
குலமென மாய்ந்தது கொடிய கங்குலே.

"கங்குலும் தாரகா கணமும் மாய்ந்திடப்
பொங்கொளி வீசியே பொருவில் ஆதவன்
இங்குள உலகெலாம் ஈறு செய்திடும்
சங்கார மெனத் தமியன் தோன்றினன்.

"மற்றது காலையில் வண்துழாய் முடிக்
கொற்றவன் முதலிய குழுக்கொ டேவரும்
வெற்றிகொள் வீரரும் வேறு தத்தமக்கு
உற்றிடும் ஊர்திமேல் ஒருங்குற் றீண்டினர்.

"ஞாயிறு கறங்கென நணுகும் பொன்முடிக்
கோயிலின் மருங்கினில் குழிஇக் குழிஇ இரண்டு
ஆயிர வெள்ளமாம் அடல்வெம் பூதரும்
ஏயென எழுந்தனர் எழுந்த பூமியே.

"ஆரண முழங்கொலி அமரர் வாழ்த்தொலி
சீரண இயலொலி சேனைப் பேரொலி
காரணம் இல்லவன் கடவு மாமயில்
வாரண ஒலிகளால் மறைத லுற்றவே.

"இடனுறு குறிஞ்சியில் இனைய தன்மையால்
நடவைகொள் பெரும்படை நடுவண் ஏகியே
சுடர் பொழி வேலினன் தூய கூடலின்
குடதிசை அமர்பரங் குன்றை எய்தினன்.

"வற்றா வருள்சேர் குமரேசன் வண்கதை தன்னைச்
சொற்றாரும் ஆராய்ந் திடுவாருந் தகவுறுமே
கற்றாங்ச் கற்பான் முயல்வாருங் கசிந்து கேட்கல்
உற்றாரும் வீடுநெறிப் பாலினுறு வரன்றே."



---

The India Printing Works, Madras.